# டாக்டர் ஜி. யு. போப்

ஆராய்ந்து
குறிப்புக்கள் எழுதிய

# புறநானூறு

மூலமும் உரையும்



டாக்டர் ஜி. யு. போப்

**1820 - 1908**

*பேராசிரியர்*

திருமணம் செல்வக் கேசவராய முதலியார்

*பயன்படுத்திய இந்நூல்*

அவர்கள்தம் பேரன் திருவாளர்
தி நம்பிராசன் அவர்களால்
மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு
அன்பளிப்பாக
வழங்கப்பெற்றது.

# டாக்டர் ஜி. யு. போப்

ஆராய்ந்து
குறிப்புக்கள் எழுதிய

# புறநானூறு

## மூலமும் உரையும்

உ

கணபதி துணை.

எட்டுத்தொகையுள் ஒன்றாகிய

# புறநானூறு மூலமும்

# உரையும்

கும்பகோணம்

இவை

காலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய

உத்தமதானபுரம்

வே. சாமிநாதையரால்

பல பிரதிருபங்களைக்கொண்டு

பரிசோதித்து

சென்னை
வே. நா. ஜூபிலி அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1894



விலை ருபா. ௪

உ

கணபதி துணை.

# எட்டுத்தொகையுள்

ஒன்றாகிய

வத்தைப்பயனும் அறத்தனைராறு புகழவும்படும்; பெண்வடிவு, ஒருபக்கமாயிற்று
ய அவ்வடிவுதான், தன்னுள்ளேயொடுக்கி மறைக்கினும் மறைக்கப்படும்; பிறை



*திருநுதற்கு அழகாயது; அப்பிறைதான், பெரியோன் சூடுதலால், பதினெண் கணங்களாலும் புகழவும்படும்; எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும் காவலாகிய; நீர் தொலைவறியாக்குண்டிகையானும் தாழ்ந்த திருச்சடையானும் சிறந்த செய்தற்கரிய தவத்தையுடையோனுக்கு.—(என்றவாறு.)

தன்னுளடக்கிக் காக்கினுங் காக்குமென்பதற்கு அவ்வடிவுதான் எல்லாம்பொருளையும் தன்னுள்ளேயடக்கி, அவ்விறைவன்கூற்றிலே மறையினுமறையுமென்று உரைப்பினுமமையும். நீரறவறியாக்கரகம் - கங்கையென்பாருமுளர். அக்கறை அவ்வுரு, அப்பிறை எனநின்ற எழுவாய்கட்கு, நுவலவும்படும், காக்கினுங்காக்கும், ஏத்தவும்படும் எனநின்ற பயனிலைகளை நிரலேகொடுக்க. இவ்வெழுவாய்களையும், பிறவற்றையும் அருந்தவத்தோற்கென்னும் நான்காவதனோடுமுடிக்க. ஏமமாகிய

அருந்தவத்தோனென்க; ஏமமாகிய சீரெனினும் அமையும். அணியலுமணிந்தன் றென்பது, † "உண்ணலு முண்ணேன்" என்பதுபோல நின்றது. பதினெண் கணங்களாவார்: தேவரும் அசுரரும் முனிவரும் கின்னரரும் கிம்புருடரும் கருடரும் இயக்கரும் இராக்கதரும் கந்தருவரும் சித்தரும் சாரணரும் வித்தியாதரரும் நாகரும் பூதரும் வேதாளமும் தாராகணமும் ஆகாசவாசிகளும் போகபூமியோரு மென்னுமிவர்; பிறவாறுமுரைப்பர்.

இப்பெரியோனை மனமொழிமெய்களான் வணங்க, அறமுதல்நான்கும் பயக்கு மென்பது கருத்தாகக் கொள்க. (க)

---

(உ.) மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும், என்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலு மளியு முடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந!
வானவரம்பனை! நீயோ பெரும!
அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்

---

* திருநுதலென்றும் பிரதிபேதமுண்டு.

† கலித்தொகை, முதலாவது பாலை, உஉ:—"உண்ணலு முண்ணேன் வாழ்வும் வாழேன், தோணல முண்டு துறக்கப் பட்டோர், வேணீ ருண்ட குடையோ ரன்னர்."

பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!
பாஅல் புளிப்பினும் பகலிருளினும்
நாஅல் வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
உ நடுக்கின்றி *நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
யந்தி யந்தண ரருங்கட னிறுக்கு
23 முத்தீ விளக்கிற் றுஞ்சும்
24 பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே.

திணை - பாடாண்டிணை; துறை - †செவியறிவுறூஉ; வாழ்த்தியலுமாம்.
சேரமான்பெருஞ்சோற் றுதியஞ்சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது.

(இ - ள்.) அணுச்செறிந்த நிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின்கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமென, ஐவகைப்பட்ட, பெரிய பூதத்தினது தன்மைபோலப் பகைவர் பிழைசெய்தால் அப்பிழையைப் பொறுத்தலும், அப்பிழை பொறுக்குமளவல்ல வாயின் அவரை அழித்தற்கு (உசாவும்) உசாவினது அகலமும், அவரை அழித்தற் கேற்ற மனவலியும் சதுரங்கவலியும், அவ்வாற்றால் அவரை அழித்தலும், அவர் வழிப் பட்டால் அவர்க்குச்செய்யும் அருளுமுடையோய்! நினது கடற்கட்டோன்றிய ஞாயிறு பின்னும் நினது வெள்ளிய தலைப்பொருந்திய திரையையுடைய மேல்கடற் கண்ணே மூழ்கும் புதுவருவாய் இடையறாத ஊர்களையுடைய நல்ல நாட்டிற்கு வேந்தே, வானவரம்ப, பெரும, நீ, அசைந்த தலையாட்ட மணிந்த குதிரையையுடைய பாண்டவரைவருடனே சினந்து நிலத்தைத் தம்மிடத்தேகொண்ட பொற்பூத் தும்பையையுடைய துரியோதனன்முதலாகிய நூற்றுவரும் பொருது போர்க்களத் தின்கண் படுந்துணையும் பெருஞ்சோறாகிய மிக்க உணவை இருபடைக்கும் வரை [illegible]

வாக்கி, ஞாயிறு குளிக்குமென்பதனை முற்றாக்கி, இதனை அவ்வினைக்குப் பொரு ளாக்கி உரைப்பாருமுளர். மூத்தோராவன: ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசை யங்கி. ஆங்கும், அத்தையும் அசைநிலை. வானவரம்பனை, ஐகாரம் முன்னிலை விளக்கின்றது. நிலந்தலைக்கொண்டவென்பதற்கு நிலங்கோடல் காரணமாகத் தலைக்கட்குடைய வெனினுமமையும்.

போற்றார்ப்பொறுத்தல்முதலிய குணங்களையுடையோய், பொருந, வரையாது கொடுத்தோய், வானவரம்ப, பெரும, நீ, புளிப்பினும் இருளினும் திரிபினும் இமய மும் பொதியமும்போன்று நடுக்கின்றிச் சுற்றமொடு விளங்கி நிற்பாயாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

போற்றார்ப்பொறுத்தல்முதலாகிய குணங்களை அரசியலுடைவாற் கூறுகின்று ராதலின், பூதங்களின் அடைவு கூறாராயினர்.

இதனாற்சொல்லியது, * தன்கடற்பிறக்குஞாயிறு தன்கடற்குளிக்குநாடுடைமை யாற் செல்வமுடையையாகவென்று வாழ்த்தவேண்டுவதின்மையின், நீவாழ்க வென வாழ்த்தியவாறாயிற்று. (௨)

(௩) உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற,
ஏமமுரச மிழுமென முழங்க,
நேமி யுய்த்த நேஎ நெஞ்சிற்
(௫) றவிரா வீகைக் கவுரியர் மருக!
செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ!
†பொன்னோடைப் புகரணி நுதற்
றுன்னருந் திறற் கமழ்கடா அத்
தெயிறு படையாக வெயிற்கத விடாஅக்
(௧௦) கயிறு பிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை யிரும்பிடர்த் தலையிருந்
து மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயாக்
கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி!
நிலம்பெயரினு நின்சொற் பெயரல்
(௧௫) பொலங்கழற் காற் புலர்சாந்தின்

துறைப்பிறழ்மையும்; [illegible]விட்டுக் கயிறுபிணிக்கொண்டவென இயைத்து[illegible] பாருமுளர். ஊரில்ல உயவரிய நீரில்ல நீளிடையவாகிய உன்னமரத்த கவலை[illegible]வும், பருந்திருந்து[illegible] [illegible]லைவென வுகி இயையும்.

மரு[illegible], [illegible], மாறுப, இரவலர்வருவர, அவர் இன்மைதீர்[illegible] வல் [illegible]ன்; [illegible], நின்சொற்பெயராதொழியல்வேண்டுமெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

[illegible]தல்விளங்க, வேண்டுமென ஒருசொல் தருவிக்கப்பட்டது. (ங)

(ச.) வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப் போன்றன;
தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப் போன்றன;
ரு தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ விலக்கம்போன்றன;
மாவே, யெறிபதத்தா னிடங்காட்டக்
*கறுழ்பொருத செவ்வாயான்
எருத்துவவ்விய புலிபோன்றன;
க0 களிறே, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டா
னுயிருண்ணுங் கூற்றுப்போன்றன;
நீயே, யலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் †பொலிவுதோன்றி,
கரு மாக்கட னிவந்தெழுதருஞ்
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ;
அனையை யாகன் மாறே
தாயி றூவாக் குழவிபோல
வோவாது கூஉநின் னுடற்றியோர் நாடே.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை.

சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியைப் பரணர்பாடியது.

னை தோன்றுவன, வில்லிற்றப்பாத இலக்கத்தை யொத்தன; குதிரைகள், எதிரியை எறியுங் காலமுடையான் இடவாய் வலவாயாகிய இடத்தைக்காட்டி முகக்கருவி பொரப்பட்ட செவ்வாயையுடைமையான் மான்முதலாயினவற்றின் கழுத்தைக் கவ்வி உதிரக் கறைப்பட்ட புலியையொத்தன; களிறுகள், கதவைமுறித்து வெகுண்டு உலாவி அழிவுசெய்த வெளிய கோட்டையுடைமையான் உயிரையுண்ணுங் கூற்றையொத்தன; நீதான், அசைந்த தலையாட்டமணிந்த கதியையுடைய குதிரையாற் பூட்டப்பட்ட பொற்றேரின்மேலே பொலிவொடுதோன்றுதலாற் கரிய கடலின் கண்ணே தோன்றியெழுகின்ற செய்ய ஞாயிற்றினது ஒளியையுடையை; அத்தன்மையையுடையையாதலால், தாயில்லாத உண்ணாக்குழவிபோல ஒழியாது கூப்பிடும், நின்னைச் சினப்பித்தவருடைய நாடு.—(எ - று.)

நாடென்றது, நாட்டின்வாழ்வாரை. யாரென்பது, எதிர்ப்பொருள்படவந்தோர் இடைச்சொல். கழல்பறிந்தவென்றோதி, அதற்கு வீரக்கழலிங்கிய அடியென்று உரைப்பாருமுளர். வாளாகிய மறுப்பட்டனவெனவும், கழலாகிய பறைந்தனவெனவும், தோலாகிய துளைதோன்றுவவெனவும் கொள்க. துளைத்துத் தோன்றுவ வென இயையும். எறிபத்தானென்பதற்கு ஒத்தும் காலையுடையானென்று உரைப்பாருமுளர்.

செஞ்ஞாயிற்றுக்கவினையென்று துணையும் மன்னவன் புகழும், ஓவாது கூஉமின் உடற்றியோர் நாடென ஒன்னார்நாடழிபிரங்கலுமாதலான், இது கொற்றவள்ளையாயிற்று.

(ரு.) *எருமை யன்ன கருங்க லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலி னின்னொன்று மொழிவல்
(ரு) அருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே.

* திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ; பொருண்மொழிக் காஞ்சியுமாம்.

கழுதவ் வெயிறு கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கிப்
பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
யிறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
௨௰ நான்மறை †முனிவ ரேந்துகை யெதிரே
வாடுக ‡விறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே
§செலிய ரத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
௨௫ ஆங்க, வென்றி யெல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா வீகைத் தகைமாண் குடுமி
தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னுக பெருமநீ நிலமிசை யானே.

திணை - பாடாண்டிணை; துறை - || செவியறிவுறூஉ; வாழ்த்தியலுமாம்.
பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடியது.

(இ - ள்.) வடக்கின்கண்ணது பனிதங்கிய நெடிய இமயமலையின் வடக்கும், தெற்கின்கண்ணது, உட்குந்திறம்பொருந்திய, கன்னியாற்றின் தெற்கும், கீழ்க்கண்ணது, கரையைப்பொருகின்ற, சகரரால், தோண்டப்பட்ட, சாகரத்தின்கிழக்கும், மேல்கண்ணது பழையதாய் முதிர்ந்த கடலின்மேற்கும், கீழதாகிய நிலமும் ஆகாயமும் சுவர்க்கமுமென மூன்றுங்கூடிய, புணர்ச்சியாக, அடுக்கப்பட்ட, அடைவின்கண் முதற்கட்டாகிய, நீர்நிலைக்கண் ஓங்கிய நிலத்தின்கீழும், மேலதாகிய கோலோகத்தின்கண்ணும் அமையாது உட்கும் புகழுமாக; பரந்த அளவையுடைய பொருள்களை ஆராயுந் துலாக்கோலின்கட் சமன்வாய்போல ஒருபக்கங்கோடாதொழிக; நினது படை குடிமுதலாகிய கூறுபாடுகள் சிறக்க; போர்செய்தற்கு மாறுபட்ட பகைவர்தேயத்தின்கண்ணே நினது கடல்போலும் படை மேல்விழுந்து உள்புக மிக்குச்சென்று, அடர்ந்த புகரினையுடைய சிறுகண்யானையைத் தடையின்றி நேரேயேவி [illegible] பசிய விளைநிலப்பக்கத்தில் தங்கிய அரிய மதிலரண் பலவற்

இஃது, இவ்வாறு செய்கவென அரசியல்கூறலிற் செவியறிவுறூஉவும், மதிய மும் ஞாயிறும் போல மன்னுகவென்றமையான் வாழ்த்தியலுமாயிற்று. (௬)

(எ.) *களிறு கடைஇய தாட்
கழ்லுரீஇய திருந்தடிக்
†கணைபொருது கவிவண் கையாற்
கண்ணொளிர் வரூஉங் கவின்சாபத்து
மாமறுத்த மலர்மார்பிற்
றோல்பெயரிய வெறுழ்முன்பின்

---

* இப்பாட்டினை, வஞ்சித்திணைக்குரிய எரிபரந்தெடுத்தலென்னுந் துறைக்கு உதாரணமாகக்காட்டினர் நச்சினார்க்கினியர் [தொல், பொரு, புறத்திணையியல், அ-ம் சூத்திரவுரை].

† கணைக்கால் பொருதவென்றும் பாடம்.

7. 8.

7 னெல்லையு மிரவு *மெண்ணாய் பகைவ
8 ரூர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
9 கொள்ளை மேவலை யாகலி னல்ல
10 வில்லவா குப வியற்றேர் வளவ
11 தண்புனல் பரந்த பூசன் மண்மறுத்து
12 மீனிற் செறுக்கும் யாணர்ப்
13 பயன்றிகழ் வைப்பிற் பிறரகன் றலைநாடே.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை; மழபுலவஞ்சியுமாம்.
சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

(இ - ள்.) களிற்றைச் செலுத்திய தாளையும் வீரக்கழலணிந்த இலக்கணத் தாற்றிருந்திய அடியினையும், அம்பொடு †பொருது இடக்கவித்த வள்ளிய கையுடனே கண்ணிற்கு விளங்கும் அழகினையுடைய வில்லையும், திருமகள் பிறர்மார்பை மறுத்தற்கு ஏதுவாகிய பரந்த மார்பினையும், யானையைப்பெயர்த்த மிக்க வலியினையுமுடைய, பகலுமிரவுமெண்ணாது பகைவரது ஊரைச்சுடுகின்ற தீயினது ஒளியின்கண்ணே, தஞ்சுற்றத்தை அழைத்தலுடனே அழுகின்ற கூவுதலையுடைய ஆரவாரத்தோடுகூடிய கொள்ளையை விரும்புதலுடையை; ஆதலான், நல்ல பொருள்கள் இல்லையாகுவனவால்; இயற்றப்பட்ட தேரையுடைய வளவ! குளிர்ந்த நீர் பரந்த ஓசையையுடைய உட்பூக்களை மண்மறுத்தலான் மீனாலடைக்கும் புதுவருவாயினையுடைய, பயன்விளங்கும் ஊர்களையுடைய, மாற்றாரது அகன்ற இடத்தையுடைய நாடுகள். — (எ,- று.)

✓ திருந்தடி யென்பதற்குப் பிறக்கிடாத அடியெனினும் அமையும். கணைபொருதென்றது, அம்பொடுபொருதலை.

தாளையும், அடியையும், கையுடனே சாபத்தையும், மார்பையும், முன்பையுமுடைய வளவ, நீ கொள்ளைமேவலையாதலின், யாணரையும் வைப்பினையுமுடைய பிறர்நாடு, நல்ல இல்லவாகுபவெனக் கூட்டுக.

நாடு நல்ல இல்லவாகுபவென, இடத்துநிகழ்பொருளின்றொழில், இடத்துமேலேறிநின்றது. இனித் தாளாலும், அடியாலும், கையாலும், சாபத்தாலும், மார்பாலும், முன்பாலும், கொள்ளைமேவலையாகலினென ஆனுருபுவிரித்துரைப்பினுமமையும்.

இது, பிறரகன்றலைநாடு நல்ல இல்லவாகுபவென்றமையிற் கொற்றவள்ளையும், ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலையென்றமையின் மழபுலவஞ்சியுமாயிற்று. (எ)

(பா.) ‡ வியங்காவலரி வழிமொழிக் கொண்டகப் [illegible]

திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
(ரு) கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
(க0) பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி; பூவைநிலையுமாம். சேரமான்கடுங்கோவாழியாதனைக் கபிலர் பாடியது.

(இ - ள்.) உலகத்தைக்காக்குமரசர் வழிபாடுசொல்கேட்டு நடக்க நுகரும் இன்பத்தைவிரும்பிப் பூமி பிறவேந்தருக்கும் பொதுவென்னும் வார்த்தைக்குப் பொறாது தன்னுடைய இடஞ்சிறிதென்னும் மேற்கோள் செலுத்த மடியாத உள்ளத்தையும் பொருளைப் பாதுகாவாது வழங்கும் வண்மையையும் அஞ்சியாது எதிர்நின்றுகொல்லும் படையையுமுடைய சேரலாதனை எவ்வாறொப்பை? மிக்க செலவையுடைய மண்டிலமே, நீ பகற்பொழுதை நினக்கெனக் கூறுபடுப்பை; நின்மண்டிலத்தை நிறைந்து முதுகிட்டுப் போதி; தெற்கும் வடக்குமாகிய இடங்களில் மாறிமாறிவருதி; மலையின்கண்ணே வெளிப்படாது கரப்பை; அகன்ற பெரிய ஆகாயத்தின்கண்ணும் பகற்பொழுதுவிளங்குவை, பலகிரணங்களையும் பரப்பி.—(எ - று.)

மாறிவருதியென்பதற்கு இராசிதோறும் மாறிவருதியெனினுமமையும்.

வீங்குசெலன்மண்டிலமே, வரைதி; இறத்தி; வருதி; ஒளித்தி; நீ விசும்பினானும் பகல்விளங்குதி; இக்குறைபாடெல்லாமுடைய நீ சேரலாதனை யாங்கன மொத்தியோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

ஒழுகவென்னுமெச்சம், நுகருமென ஒருசொல்வருவித்து அதனோடுகூட்டி முடிக்கப்பட்டது; ஒழுகவும் போகநுகரவும்வேண்டியெனினுமமையும். வேண்டி, பொறாது, துரப்ப எனநின்ற வினையெச்சங்கள், ஒடுங்காவென்னும் பெயரெச்சமறையோடு முடிந்தன. இனி, 'பகல்விளங்கலை' என்னும் பாடத்திற்குத் திங்கண்மண்டிலமாக்கி, 'மாறிவருதி' என்பதற்குத் தேய்ந்தும் வளர்ந்தும் வருதியெனவும் பிறவும் அதற்கேற்பவுரைப்ப. (அ)

(கூ.) ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்

௯ செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
௧0 முந்நீர் விழவி னெடியோன்
௧௧ நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

(இ - ள்.)—ஆவும், ஆனியல்பையுடைய அந்தணரும், மகளிரும், நோயுடையீரும், பாதுகாத்துத் தென்றிசைக்கண் வாழ்வோராகிய நங்குடியிலிறந்தோர்க்குச் செய்தற்கரிய பிண்டோதகக்கிரியையைப் பண்ணும் பொன்போலும் பிள்ளைகளைப் பெறாதீரும், எம்முடைய அம்பை விரையச்செலுத்தக்கடவேம்; நீர் நுமக்கரணாகிய இடத்தை அடையுமென்று அறநெறியைச்சொல்லும் மேற்கோளினையும் அதற்கேற்ற மறத்தினையுமுடைய, கொல்யானைமேலே எடுக்கப்பட்ட கொடிகள் ஆகாயத்தைநிழற்செய்யும் எம்முடைய வேந்தனாகியகுடுமி வாழ்வானாக; தம்முடைய கோவாகிய சிவந்த நீர்மையையுடைய போக்கற்ற பசியபொன்னைக் கூத்தர்க்கு வழங்கிய முந்நீர்க்கடற்றெய்வத்திற்கெடுத்த விழாவினையுடைய *நெடியோனாலுண்டாக்கப்பட்ட நல்ல நீரையுடைய பஃறுளியென்னுமாற்றின் மணலினும் பலகாலம்.—(எ - று.)

எங்கோவாகிய குடுமி, பஃறுளியாற்றின்மணலினும் பலகாலம் வாழியவெனக் கூட்டுக.

* கொடி விசும்பு நிழற்றுமென்பது; இளைவினைப்பாற்பட்டு எங்கோவென்னும் முதலொடுமுடிந்தது; கொடியால் விசும்பு நிழற்றுமென்றுரைப்பினுமமையும்; "மீமிசைக்கொடி விசும்புநிழற்றும் களிற்றினையுமென மாறிக்கூட்டுவாருமுளர். தங்கோச் செந்நீர்ப் பசும்பொனென்பதற்குத் தமதரசாட்சியினது செவ்விய நீர்மை

யாற்செய்த பசும்பொனென்பாருமுளர். முந்நீர்க்கண் வடிம்பலம்பநின்றானென்ற லிப்பால், நெடியோனென்றாரென்ப. யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடைமையால், கடற்கு முந்நீரென்றபெயராயிற்று; அன்றி, முன்னீரென்றோதி, நிலத்திற்குமுன்னாகிய நீரென்றுமுரைப்ப. பிணியுடையீரும் புதல்வர்ப்பெறாதீருமென்னும் முன்னிலைப்பெயரோடு, ஆவும் பார்ப்பனமாக்களும், பெண்டிருமென்னும் படர்க்கைப்பெயர்கள் விராய்வந்து, நம்மரண்சேர்மினென்னும் முன்னிலைவினையான்முடிதல்; "†செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினும்" என்னும் அதிகாரப்புறனடையாற் கொள்ளப்படும். (க)

(க0.) வழிபடு தொண்ணா வல்லதி இயே. (1)
2. பிறர்பழி கூறுவோர் மொழி தூற்றலே (2)
3. நீமெய் கண்ட இமை காணி
4. ஞெப்ப நாடி யித்தக வொறுத்தி (3)

* உயர்த்தோனென்றும் பிரதிபேதமுண்டு.
† தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், சுஎ.

10.7.XX

5 வந்தடி பொருந்தி முந்நிற் பிற்
6 தண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே
7 அமிழ்தட் டானாக் கமழ்குய் அடிசில்
8 வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை
9 மகளிர் மலைத்த லல்லது மள்ளர்
க0 மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப!
11 செய்திரங் காவினைச் சேண்விளங்கும் புகழ்
12 நெய்தலங் கானல் நெடியோய்!
13 எய்தவந் தனம்யா மேத்துகம் பலவே.

திணையும் துறையும் அவை.

சோழன் *நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது.

(இ-ள்.) நின்னை வழிபட்டொழுகுவோரை விரையவறிவை; பிறருடைய குற்றஞ்சொல்லுவாரது வார்த்தையைத் தெளியாய்; நீ மெய்யாக மனத்தானாராய்ந்து அறுதியிடப்பட்ட கொடுமையை ஒருவன்பாற்காணின், அதனை நீதிநூற்குத் தக ஆராய்ந்து அத்தீமைக்குத்தகத் தண்டஞ்செய்வை; வந்து நின்பாதத்தையடைந்து முன்னேநிற்பாராயின், அவர்பிழைசெய்வதற்குமுன் நீ செய்யுமருளினும் அருள்பெரிதாக அவரைச்செய்யுந் தண்டமும் தணிவை; அமிழ்தத்தைத் தன்சுவையால் வென்று உண்ணவுண்ண அமையாத மணங்கமழும் தாளிப்பையுடைய அடிசிலை விருந்தினர்க்கு மிகுதிகுறைபடாமல்வழங்கும் பழிதீர்ந்த மனைவாழ்க்கையையுடையை; பெண்டிர்முயக்கத்தால் மாறுபடுத்தலல்லது வீரர் போரான் மாறுபடுத்தலொழிந்த இந்திரவிற்போலும் மாலையையுடைய மார்ப, ஒருதொழிலைச்செய்து பின் பிழைக்கச்செய்தேமென்று கருதாத செய்கையையும் சேய்மைக்கண்ணே விளங்கும் புகழினையுமுடைய, நெய்தலங்கானலென்னும் ஊரையுடைய நெடியோய், அணுக வந்தேம்யாம்; நின் பலகுணங்களையும் புகழ்வேமாக.—(எ-று.)

வழிபடுவோரை வல்லறிதியென்றது, அறிந்து அவர்களுக்கு அருள்செய்வை யென்பதாம். பெரிதென்பது வினையெச்சக்குறிப்பாகலின், ஆகவென ஒருசொல் வருவித்துரைக்கப்பட்டது. பண்டையிற்பெரிதென்பதற்கு நீ பண்டுசெய்த கோபத்தினும் பெரிதாகத் தணிதியென்றுரைப்பினுமமையும். அடப்பட்டமையாத அமிழ்துபோலும் அடிசிலென்றுரைப்பினுமமையும்.

ரு) தண்பொருநைப் புனற்பாயும்
விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்
பாடல்சான்ற விறல்வேந்தனும்மே
வெப்புடைய வரண்கடந்து
துப்புறுவர் புறம்பெற் றிசினே ;
௧௦) புறம்பெற்ற வயவேந்தன்
மறம்பாடிய பாடினியும்மே
ஏருடைய விழுக்கழஞ்சிற்
சீருடைய விழைபெற் றிசினே ;
இழைபெற்ற பாடினிக்குக்
கரு) குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனுமே, எனவாங்
கொள்ளழற் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசில்கடாநிலை.

சேரமான்பாலைபாடியபெருங்கடுங்கோவைப் *பேய்மகள் இளவெயினி பாடியது.

(இ - ள்.) ஐய மயிரையுடைய திரண்ட முன்கையினையும் தூய ஆபரணத்தையுமுடைய பேதைமகளிர் வண்டலிலிழைத்த சிற்றிற்கட்செய்த பாவைக்கு வளைந்த கோட்டிற்பூவைப்பறித்துக் குளிர்ந்த ஆன்பொருந்தத்துநீரின்கட் பாய்ந்து விளையாடும் வானைமுட்டிய புகழினையும் வென்றியையுமுடைய கருவூரின்கட் பாடுதற்கமைந்த வெற்றியையுடைய அரசனும், பகைத்தெழும் வெம்மையையுடைய அரணை அழித்து வலியோடு எதிர்ந்தவருடைய புறக்கொடையைப் பெற்றான் ; அப்புறக்கொடையைப்பெற்ற வலிய அரசனது வீரத்தைப்பாடிய பாடினியும், தோற்றப் பொலிவுடைய சிறந்த பல கழஞ்சாற் செய்யப்பட்ட தன்மையையுடைய அணிகலத்தைப்பெற்றாள் ; அவ்வணிகலத்தைப்பெற்ற விறலிக்கு முதற்றானமாகிய குரலிலே வந்துபொருந்தும் அளவையுடைய பாட்டைவல்ல பாணனும், விளங்கிய தழலின்கண்ணே ஆக்கப்பட்ட பொற்றாமரையாகிய வெள்ளிநாராற்றொடுத்த பூவைப் பெற்றான். — (எ - று.)

பாடினி இழைபெற்றாள் ; பாணன் பூப்பெற்றான் ; யான் அதுபெறுகின்றிலே.

னெனப் பரிசில்கடாநிலையாயிற்று; இனி, இவள் பேயாயிருக்கக் கட்புலனாயதோர் வடிவுகொண்டுபாடினுளொருத்தியெனவும், 'இக்களத்துவந்தோர்யாவரும் பரிசில் பெற்றார்கள்; ஈண்டு நின்றேன் எதிர்ந்து பட்டோரில்லாமையான், எனக்கு உணவாகிய தசை பெற்றிலென்' எனத் தான்பேய்மகளான்மைதோன்றப் பரிசில்கடாயினுளெனவுங்கூறுவாருமுளர். 'பாடினிக்கு... பாண்மகன்' என்பது, அதுவெனுருபுகெடக் குகரம்வந்தது; உயர்திணையாகலின். பாடினிபாடலுக்கேற்பக் கோளவல் பாண்மகனெனினுமமையும். எனவும், ஆங்கும் - அசைநிலை. பெற்றிசின் மூன்றும், படர்க்கைக்கண்வந்தன. (கக)

---

* பேய்மகள் இளவெயினியென்றும் பிரதிபேதமுண்டு.

(கஉ.) பாணர் தாமரை மலையவும் புலவர்
2 பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
3 அறனோ மற்றிது விறன்மாண் குடுமி
4 இன்னா வாகப் பிறர்மண் கொண்டு
(௫) இனிய செய்திநின் னார்வலர் முகத்தே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழிவாழ்த்து.
பாண்டியன்பல்யாகசாலைமுதுகுடுமிப்பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

(இ-ள்.) பாணர் பொற்றாமரைப்பூவைச் சூடவும், புலவர் பட்டம்பொலிந்த மத்தகத்தையுடைய யானையுடனே அலங்கரிக்கப்பட்ட தேரின் சிறத்தற்கேற்ப அமைக்கவும், அறனோ? இவ்வாறுசெய்தல் வென்றிமாட்சிமைப்பட்ட குடுமி, வேற்றரசருடைய நிலத்தை அவர்க்கின்னாவாகக்கொண்டு நின்னுடைய பரிசிலரிடத்து இனியவற்றைச்செய்வை.—(எ-று.)

குடுமி, பிறர்மண் இன்னாவாகக்கொண்டு, மலையவும் பண்ணவும் நின் ஆர்வலர் முகத்து இனியசெய்வை; இது நினக்கு அறனோ? சொல்லுவாயாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

மற்று - அசைநிலை.

இது, பழித்ததுபோலப் புகழ்ந்ததாகக்கொள்க. (கஉ)

(கங.) இவனியா ரென்குவை யாயி னிவனே
2 புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
3 எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
4 மறலி யன்ன களிற்றுமிசை யோனே
(௫) களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
6 பன்மீ னாப்பட் டிங்கள் போலவுஞ்
7 சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
8 மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே
9 நோயில னாகிப் பெயர்கதி லம்ம
க0 பழன மஞ்ஞை யுகுத்த பீலி
11 கழனி யுழவர் சூட்டொடு தொகுக்குங்
12 கொழுமீன் விளைந்த கள்ளின்
13 விழுநீர் வேலி நாடுகிழ வோனே.

கொடுவர, வந்தோர் அவ்வாசை பின் ஒழிய வசையுண்டாக உயிர்வாழ்ந்தோர் பலரோ? குற்றமில்லாத கல்வி தரும் நூலினும் நால்வகைப்பட்ட வேதத்தினுஞ் சொல்லப்பட்ட எய்தற்கரிய மிக்கபுகழையுடைய சமிதையும் பொரியும் முதலாகிய பெரிய கண்ணுறையோடு நெய்மிக்க புகை மேன்மேற்கிளரப் [illegible] பட்ட கெடாத் தலைமையையுடைய யாகங்களை முடித்துத் தூணட்டப்பட்ட அகன்ற வேள்விச்சாலைகள் பலவோ? இவற்றுள், யாவையோ பல? பெரும, வார் பொருந்தி வலித்துக்கட்டுதலைப்பொருந்திய மார்ச்சனைசெறிந்த தண்ணுமைமலிய யுடைய விறலியர்பாடும் மேற்செலவினுக்கு ஏற்ப, ஆராய்தலமைந்த வலியையுடையோய்; நினக்கு.—(எ - று.)

பூட்டி என்னும் வினையெச்சத்திற்கு உழுதென்னுஞ்சொல் தந்துரைக்கப்பட்டது. நற்பனுவலாகிய நால்வேதமென்பாருமுளர். நற்பனுவல்நால்வேதத்து வேள்வியென இயையும்.

மு.—பெரும, மைந்தினோய், பாழ்செய்தனை; தேர்வழங்கினை; வயம்படுத்தினை; ஆதலின், நினக்கு ஒன்றாகிய வசைபடவாழ்ந்தோர் பலர்கொல்? யூபம்நட்ட வியன் களம் பலகொல்? இவற்றுள், யா பலகொல்லோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

—விளக்குபொன்னெறிந்தவென்பதற்குக் கண்ணாடி தைத்தவெனினும் அமையும். தார் முன்பு தலைக்கொண்மாரென்பதற்குத் தாரை வலியால் தலைப்படவெனினும் அமையும். புரையுநற்பனுவலென்பதூஉம் பாடம். யாபலவென இவ்விரண்டின்பெருமையும் கூறியவாறு.

இவை எப்பொழுதுஞ்செய்தல் இயல்பெனக்கூறினமையின், இதுவும் இயன்மொழியாயிற்று. (கடு)

(கசு.) வினைமாட்சிய விரைபுரவியொடு
2 மழையுருவின தோல்பரப்பி
3 முனைமுருங்கத் தலைச்சென்றவர்
4 விளைவயல் கவர்பூட்டி
5 மனைமரம் விறகாகக்
6 கடிதுறைநீர்க் களிறுபடீஇ
7 எல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கஞ்
8 செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
9 புலங்கெட விறுக்கும் வரம்பில் தானைத்

௫) கொடிநுடங்கு | கோதிருக்கிப்
6 படுவதுண்டு | பகலாற்றி
7 யினிதுருண்ட | சுடர்நேமி
8 முழுதாண்டோர் | வழிகாவல
9 குலையிறைஞ்சிய | கோட்டாழை
௧0) யகல்வயன் | மலைவேலி
11 நிலவுமணல் | வியன்கானற்
12 றெண்கழிமிசைச் | சுடர்ப்பூவிற்
13 றண்டொண்டியோ | ரடுபொருந
14 மாப்பயம்பின் | பொறைபோற்றாது
௧௫) நீடுகுழி | யகப்பட்ட
16 பீடுடைய | வெறுழ்முன்பிற்
17 கோடுமுற்றிய | கொல்களிறு
18 நிலைகலங்கக் | குழிகொன்று
19 கிளைபுகலத் | தலைக்கூடியாங்கு
௨0) நீபட்ட | வருமுன்பிற்
21 பெருந்தளர்ச்சி | பலருவப்பப்
22 பிறிதுசென்று | மலர்தாயத்துப்
23 பலர்நாப்பண் | மீக்கூறலின்,
24 உண்டாகிய | வுயர்மண்ணுஞ்
௨௫) சென்றுபட்ட | விழுக்கலனும்
26 பெறலகூடு | மிவனெஞ்சுறப்பெறி | னெனவும்
27 மேந்துகொடி | யிறைப்புரிசை
28 வீங்குசிறை | வியலருப்பம்
29 மிழந்துவைகுது | மினிநாமிவன்

கே.—(எ - ம.)

கவல, பொருந, பெரும, கோவே, நீத்திக் காணகு வந்தேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

---

* குறுங்கோளியூர்கிழாரென்றும் பாடபேதமுண்டு.



குன்றென்றது, சிறுமலைகளை; அன்றி, மன்றுகுன்றென்று செய்தனிலமாக்கி வினை 'கூன்றேடு கூட்டி, சானிலத்தோருமென்று உரைப்பாருமுளர். அடு பொருநவென்றது, வேந்தற்கு வெளிப்படையாய் நின்றது. தளர்ச்சியென்பதன் பின் நீங்கவென ஒருசொல் தந்தது. 'அரும்முன்பிற் ......... பிறிதுசென்று' என்பதற்கு முன்பாகிய தளர்ச்சி பிறிதாகப் பலருவப்பச் சென்றெனினும் அமையும்; அன்றி முன்பின் தளர்ச்சி பிறிதாகச் சென்றென்று உரைப்பாருமுளர். ஆறுதல் முழங்கும் முரசென்க. (௩௭)

(கஅ.) முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்,
பரந்துபட்ட வியன்ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ,
யொருதா மாகிய வுரவோ ரும்பல்!
(ரு) ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய
பெருமைத் தாகநின் னாயுட் டானே!
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்
பூக்கதூஉ மினவாளை
நுண்ணாரற் பருவரால்
க0) *குரூஉக்கெடிற்ற குண்டகழி
வானுட்கும் வடிநீண் மதின்
மல்லன் மூதூர் வயவேந்தே!
செல்லு முலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
கரு) யொருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மற்றதன்
றகுதி கேளினி மிகுதி யாள!
நீரின் றமையா யாக்கைக் கெல்லா
முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே!
உ0) யுண்டி முதற்றே யுணவின் பிண்டம்;
முணவெனப் படுவது நிலத்தொடு நீரே.
நீரு நிலமும் புணரி யோரீண்
டுடம்பு முயிரும் படைத்திசி னோரே
வித்திவா னோக்கும் புன்புலங் கண்ணகன்

ளாதோராதலால், செறிய, இதனேஇகழாது வல்லேசெய்யென ஒருசொல் வருவித்துரைப்பாருமுளர். தந்தோரென்பதற்குத் தம்பெயரைத் தந்தோரெனினும் அமையும்.

நீரும் நிலனும் புணரியோர் உடம்பும் உயிரும்படைத்தோரெனவே செல்வமுலகத்துச் செல்வமும், வித்திவாஞேக்கும்புன்புலம் இறைவன்றாட்கு உதவாதெனவே நீர்நிலைபெருகத்தட்டலால் வாஞேக்கவேண்டாத நன்புலம் இறைவன்றாட்கு உதவி ஞாலங்காவலர் தோள்வலிமுறச்குதலும், நிலனெளிமருங்கின் நீர்நிலைபெருகத் தட்டோர் இவட்டட்டோரெனவே நல்லிசைநிறத்தலும் கூறப்பட்டன.

யையுடையோராய் ஒக்கலைவலெருடுகெடந்தார், *எம்முடைய புல்லியதலையையுடைய மைந்தர்; இப்பெற்றிப்பட்ட வென்றியும் உளவோ நமக்கென்றுசொல்லி முதிய மறக்குடியிற்பிறந்த பெண்டிர் இன்புற்று உவகையால் அழ, அதுகண்டு காணிக்

* "இமிழ்கடல் ......... ......... தலையாலங்கானத்து" எனத் தலையாலங்கானமென்றவழி ஆசிரிய அடியுள் இன்சீரியைய வெண்சீர்வந்தது என்பர் நச்சினார்க்கினியர் [தொல், பொரு, செய்யுளியல், ௬௦ - ம் சூத்திரவுரை].

கூற்றம் இரங்கிய அஞ்சத்தக்க போர்க்களத்தின்கண்ணே இருபெருவேந்தரும் ஐம்பெருவேளிருமாகிய *எழுவரது நல்லவலியை வென்றோய், நின்ற கழுவிலனினை முத்தாரம் அகத்திட்ட மார்பை.—(எ - று.)

தமிழ்தலைமயங்கியவென்புழி, தலை - அசைநிலை; இடமுமாம்.

செழிய, கடந்தோய், நின்மார்பை யான் விரும்பி முயங்கினேனல்லனோவெனக் கூட்டுக.

பெருங்கல்லடாருமென்ற உம்மை, எமக்கு விருப்பஞ்செய்தலேயன்றி நின் பகைவர்க்கு வருத்தஞ்செய்தலின், நின்மார்பு கல்லடாரும்போலுமென, எச்சவும்மையாயிற்று; சிறப்பும்மையுமாம். மூதிற்பெண்டிர் கசிதலால் நாணியெனவும் அழுதலாற் கண்ணோடியெனவும் நிரனிறையாகக்கொள்க. போர்முடிதலாற் போயினகூற்றை நாணியும் கண்ணோடியும் போயிற்றுப்போலக் கூறியது, ஓரணி கருதிநின்றது. இனி, அம்புதைத்தவனை வெட்டிப்படுத்தல் மறத்திற்கிழிவென்று பெண்டிர் இரங்கியழுதலின், கூற்றங் கண்டு நாணிக் கண்ணோடியவென்று உரைப்பாருமுளர். (கசு)

(உ0.) †இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும் என்றாங்
(ரு) கவையளந் தறியினு மளத்தற் கரியை
அறிவு மீரமும் பெருங்கண் ணோட்டமுஞ்
சோறுபடுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே.
கo) திருவி லல்லது கொலைவில் லறியார்;
நாஞ்சி லல்லது படையு மறியார்;
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது

* எழுவராவார் :— சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண், மான்பொருநன் என்பவர்; இதனை, பத்துப்பாட்டு [illegible] - ம் பக்கத்திற்காண்க. “[illegible]னைக் கடிதாரத்து, நாடுகெட வெரிபரப்பி, யாலங்
[illegible]

உயர் புகழ்வேந்தே" என்றார் மதுரைக்காஞ்சியிலும் [அடி. ௧௨௫ - ௧௩௦].

† இப்பாட்டினை, மக்கட்பாடாண்டினைக்குரிய துறைகளுள் ஊறும் புள்ளும் பிறவற்று நிமித்தமும் அச்சமும் உவகையும் எச்சமின்றிக் காலங் கண்ணிய ஓம்படைக்கு உதாரணமாகக்காட்டினர் நச்சினார்க்கினியர்; அதனை, தொல். புறத்திணையியலில், "தாவி னல்லிசை" என்னும் ௩௫-ம் சூத்திரவுரையிற்காண்க.



௧௫ பகைவ ருண்ணா வருமண் ணினையே;
16 யம்பு துஞ்சுங் கடியரணால்
17 லறந் துஞ்சுஞ் செங்கோலையே;
18 புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
19 விதுப்புற வறியா வேமக் காப்பினை;
௨௦ யனையை யாகன் மாறே
21 மன்னுயிர் செல்லா நின்னஞ் சும்மே.

திணையும் துறையும் அவை.

சேரமான்யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர்கிழார் பாடியது.

(இ - ள்.) பெரிய கடலினது ஆழமும், அகன்ற உலகத்துப் பரப்பும், காற்றியங்குந் திசையும், வடிவின்றி நிலைபெற்ற ஆகாயமும் என்றுசொல்லப்பட்டவற்றை வரையறுத்தறியினும் வரையறுத்தற்கரியை; அறிவும் அன்பும் மிக்க கண்ணோட்டமும்; ஆகலால், சோற்றை ஆக்கும் நெருப்புடனே செஞ்ஞாயிற்றினது வெம்மையல்லது வேறுவெம்மையறியார், நின்குடைநிழற்கண்வாழ்வோர்; இந்திரவில்லல்லது பகைவரது கொலைவில்லையறியார்; கலப்பையல்லது வேறு படைக்கலமுமறியார்; போர்செய்யும் கூறுபாட்டையறியும் வீரருடனே பகைவர் மாய, அம்மாற்றாருடைய *மண்ணைக் கொண்டுண்ணுந் தலைவ, நின்னுடைய நாட்டின்கண் வேட்கைநோயுற்ற பெண்டிர் விரும்பி உண்ணினல்லது பகைவருண்ணப் படாத பெறுதற்கரிய மண்ணையுடையை; அம்புதங்குங் காவலையுடைய அரணுடனே அறந்தங்கும் செவ்விய கோலையுடையை; புதியபுள் வரினும் பழையபுள் அவ்விடத்தைவிட்டுப்போகினும் அதனால் நடுக்கமுறுதலறியாத சேமமாகிய காவலை

,யுடைமை; அந்தணமையுடைமையாதலான், உலகத்து வெல்புகழ் உயர்வெல்லாம், தத்தங்காதலால் நினக்கு எதிர்வருங்கோலென்று அஞ்சும். (எ - று.)

அறிவும் ஈரமுங் கண்ணோட்டமுமென்பன, நினைவினைப்பாற்படுமேனும் அனந்தம் கரிணையென்னும் முதல்வினை கொண்டன. (உ0)

(உக.) புல்வரை யிறந்த புகழ்சால் தோன்றல்!
நில்வரை யிறந்த குண்டுகண் ணகழி;
வான்றோய் வன்ன புரிசை; விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவ ஞாயில்;
கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை
யருங்குறும் புடுத்த கானப் பேரெயில்
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
இரும்புண் ணீரினு மீட்டற் கரிதென
வேங்கை மார்ப னிரங்க வைகலும்

* இப்பொருள்பற்றியே வடமொழியிலும் 'பூபுக்' என்று அரசனைக் கூறுவர்.

வாளில்லாதோர் அக்குன்றையேகாவலாக உறங்க அசைந்த செங்கேழ் திரால் வேயப்

*கடும்பருத்த மென்றும்பாடம்.



பட்ட மெல்லிய கரும்பாற்கட்டப்பட்ட ஒழுக்குபட்டகூரை விழாவெடுத்துக்கொள்ளப்பட்ட இடம்போல் வேறுவேறாகப் பொலிவுதோன்றக் குற்று அமையாத உலக்கையொலியுடனே மிக்க ஆரவாரத்தையுடைய அகன்றவிடத்தையுடைய பொன்னாற் செய்யப்பட்ட இதழையுடைய பசிய தும்பையுடனே மிசையே அசைந்த தலையினையுடைய புனந்தோட்டைச் செருகிச் சினத்தையுடையவீரர் வெறியாடும் குரவைக் கூத்தொலியைத் தத்தையுடைய கடலொலிபோலத் தெளித்துப் பொங்கப் படைப்பெருமையாற் பகைவருட்கும் மதிப்புடைமையின் இடங்காவாது பாதுகாக்கின்ற அகன்ற பாசறையிடத்துக் காவலாள், மாற்றரசர் பணிந்துதந்ததிறையால் தம்மை அடைந்தவருடைய சுற்றத்தை நிறைக்கும் உயர்ந்த கொல்விழியோருடைய அடுபொருநயானையினது நோக்குப்போலும் நோக்கினையுடைய வெற்றிவிரும்பும் சேயே, வாழ்க, பெருமானே, நினது எல்லையில்லாத செல்வம்; நின்னைப்பாடிய விளங்கிய செவ்வியநாப்பின்னைப் பிறருடைய புகழ்ச்சொல்லாமற் பிறர்க்குக் காவாது கொடுக்கும் வலியையுடைய எங்கோவே, மாந்தரஞ்சேரலிரும்பொறை பிறர்காத்த நாடு தேவருலகத்தையொக்குமென்று பிறர்சொல்லக்கேட்டுவந்து இனிதாகக் கண்டேன்; பெருமானே, முயற்சிவெறுப்பில்லையாய் வேற்றுநாட்டின்கட்சென்று விடும் படையுடனே சோறுண்டாகட்டமை; நீ மடியாயாதலான்.—(௨௨)

கதிர்சோருமதியெனவியையும்; கதிர்சோருமென்னும் வினைவினைமதியென்னும் முதலொடுமுடிந்தது; கதிர்சோருமாலையென இயைப்பினுமமையும். பாய்கின்றென்று பாடமோதுவாருமுளர். கூரை பொலிவுதோன்றவென இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்துமேல் ஏறிநின்றது. செரீஇயென்னும் வினையெச்சத்தை ஆடுமென ஒருசொல்வருவித்து அதனோடுமுடிக்க. நிலவழங்கச் சீர்ப் புறங்கப் பொலிவுதோன்றப் பெயர்புபொங்கவென்னும் செயவெனெச்சங்களும், நோய்காவாதென்னும் எதிர்மறைவினையெச்சமும் பார்அபட்டவென்னும் பெயரெச்சவினையொடுமுடிந்தன.

காப்பான, பொருந, சேஎய், பெரும, எங்கோ, பெரும, நீ துஞ்சாயாதலாற் சேர்ப்படையுதி; அதனால், இரும்பொறை ஓம்பியநாடு புத்தேளுலகத்தற்றெனக் கேட்டுவந்து இனிதுகண்டிசின்; நின்பீடப்பு வாழியவெனக்கூட்டி வினைமுடிவு

செய்க. அன்றி, எங்கோவே! நீ அஞ்சாதபடியாலே, இரும்பொறையோம்பியகாடு புத்தேளுலகத்தற்றெனப் பிறர்சொல்லக்கேட்டு நிற்பாடிய அளங்குசெக்காப் பிறரிசைதல்லாதபடி வந்து இனிது கண்டேன்; நினது படைப்பொடு வாழ்வாயாகவென இயைப்பினுமமையும்.

11. இசின் - தன்மைக்கண்வந்தது. சோறுபடுநடத்தியென்பதனை வினையெச்சமாகவுரைப்பினுமமையும். உயிர்மருப்பினென்பதூஉம், செறிகுறுக்கினென்பதூஉம், பிணையெருத்தினென்பதூஉம் பாடம். (உஉ)

(ஆரு.) வெள்ளி நோன்காப்புப் பனிநிலை முன்னிக்
2 கீழ்நிரைப்படிந் துண்டெனக் கலங்கிய துறையும்
3 கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்
4 சூர்நவை முருகன் சுற்றத் தன்னநின்
5 கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்

12 இரும்பனையின் குரும்பைநீரும்
13 பூங்கரும்பின் றீஞ்சாறும்
14 ஓங்குமணற் குவவுத்தாழைத்
15) தீநீரோ டுடன்விராஅய்
16 முந்நீ ருண்டு முந்நீர்ப் பாயுந்
17 தாங்கா வுறையு ணல்லூர் கெழீஇய
18 ஓம்பா வீகை மாவே ளெவ்வி
19 புனலம் புதவின் மிழலையொடு கழனிக்
௨௦) கயலார் நாரை போரிற் சேக்கும்
21 பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர்
22 குப்பை நெல்லின் முத்தூ றுதந்த

* இவலியிற்கவித்தவெனவும் பாடம்.

24.

இனிது ஒழுகு; அதுவல்லதனை வாழ்ந்தோரென்பவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

தாங்காவினையுமென்பதூஉம் பாடம். ஆங்கது - ஒருசொல்; ஆங்கு - அசைநிலையுமாம். இனி, தொல்லிசையையுடைய உலகத்துத்தோன்றி மேற்சொல்லப்பட்ட தன்மைகள் தமக்குப் பரக்கவெண்ணுகாது நின்றுவிளிந்தோர் பலரென உரைப்பாருமுளர்.

இது, நிலையாமைகூறி, இனிதாக ஒழுகென்றமையாற் பொருண்மொழிக் காஞ்சி. (உ௪)

(உரு.) மீனுநிகழ் விசும்பிற் பாயிரு ளகல
ஈண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅ
துரவுச்சினந் திருகிய வுருகெழு ஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்கு
ரு) உடலருந் துப்பி னொன்றுமொழி வேந்தரை
யணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்ட காலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய
க0) முலைபொலி யாக முருப்ப நூறி
மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்
ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர
அவிரறல் கடுக்கு மம்மென்
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனைக் கல்லாடனார் பாடியது.

(இ - ள்.) மின்விளங்கும் வானத்தின்கண் பரந்த இருள்நீங்க ஒலிச்செல்லு தன்மூன்றமைமையுடைய தனதுதன்மையிற் பிழையாத வலிய வெம்மைமுறாகிய உட்குப்பொருந்திய ஞாயிறு நிலாவிளங்கும் திங்களுடனே நிலத்திடத்துப்பொருந்தி னாற்போலப் பகைத்தற்கரிய வலிமையையுடைய வெஞ்சினங்கூறிய, *இருவேந்தரும் வருத்துதற்கரிய, போர்க்களத்தின்கண்ணே, மாயப்பொருது அவருடைய வாராத் பிணிப்புற்ற முரசத்தைக்கொண்டகாலத்து நின்றநிலையிலேநின்று நின்னைச்சூழ்ந்து கொண்டவீரரைப் புரிந்தெறிதலால், இன்னிய கொளுத்திக்கல்லெனக் கெந்தல் பிழைத்தது நினதுவேல்; செழிய, பூலைபோலித்தழாரம்பம், அழல, அஃறங்கூறிகொண்டு, அறிவுமயங்கியுற்ற, அளவற்ற, அழுகைஆரவாரத்தையுடைய ஒண்ணுதல்மகளிர், கைம்மைகோலப்பிலேயிக விளங்கும், அறலையொக்கும் அழகிய மெல்லிய குவிந்த கரிய, மயிரினைக்கொய்தபரிசைக்கண்டு.—(எ - று.)

கு: செழிய, மகளிர் கூந்தல்கொய்தல்கண்டு, நின்வேல், பிழைத்தலுய்ந்ததெனக் கூட்டுக.

ஈண்டுச்செலன்மாபெனவும், ஐம்பாற் குலையிருங்கூர்தலெனவும் பாடமோது வாருமுளர். உய்ந்தன்றோ, ஓ - அசைநிலை. (உரு)

(உசு.) நளிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவும்
களனகற்றிய வியலாங்கண்
(ரு) ஒளிறிலைய வெஃகேந்தி
அரைசுபட வமருழக்கி
உரைசெல முரசுவெள்ளி
முடித்தலை யடுப்பாகப்
புனற்குருதி யுலைக்கொளீஇத்
கo தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியின்
அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய
ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்னர் ஏவல் செய்ய மன்னிய
கரு வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே
நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே.

திணையும் துறையும் அவை.

அவனை மாங்குடி கிழார் பாடியது.

* இருவேந்தர் - சேரனும், சோழனும்.

(இ - ள்.) பெரிய கடலின்கட் பெரிய ஆழத்திடத்துக் காற்றாற் புடைக்கப்பட்ட மரக்கலம் நீரைக்கிழித்து ஓடுமாறுபோலக் களிறுசென்று போர்க்களத்தை இடமகலச்செய்ய, அவ்வாறு களமகலச்செய்த பரந்த இடத்தின்கண் விளங்கிய இலையையுடைய வேலையேந்தி, வேந்துபடப் போரைக்கலக்கிப் புகழ்பரக்க, அவர் முரசைக்கொண்டு, முடித்தலையை அடுப்பாகக்கொண்டு, குருதிப்புனலாகிய உலையின்கண் தசையும் மூளையுமுதலாயினவற்றைப் பெய்து, வீரவளையையுடைய தோளாகிய துடுப்பால் துழாவிட்டப்பட்ட உணவால் அடுகளத்தின்கட் களவேள்வி வேட்ட கொல்லும்போரையுடைய செழிய! அமைந்த கேள்வியையும் ஐம்புலனுமடங்கிய விரதங்களையும் நான்கு வேதத்தையுமுடைய அந்தணர் சுற்றமாக, வேந்தர் அதற்கேற்ப ஏவல்செய்ய, நிலைபெற்ற, வேள்வியைச்செய்து முடித்த, வாய்த்த வாளினையுடைய வேந்தே! தவஞ்செய்தார், யாவர்க்குந் தெளிவாக, நின்னுடைய பகைவர்; நினக்குப் பகைவரென்னும் பெயரைப்பெற்று நின்னொடு போர்செய்தற்கு மாட்டாராயினும் அத்துறக்கத்து வாழ்வோர்.—(எ - று.)

களனகற்றவுமென்னும் உம்மை - அசைநிலை. மன்னியவேள்வியென்றது, நிலை வேள்வியொழிந்த வேள்விகளை.

செழிய, வேந்தே, ஆற்றாராயினும், ஆண்டுவாழ்வோராகிய நின்பகைவர் மாற்றாரென்னும் பெயர்பெற்று நோற்றோரெனக் கூட்டுக. (உசு)

---

(உஎ.) சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்
நூற்றித ழலரி னிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை யெண்ணுங் காலை
(ரு) உரையும் பாட்டு முடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசி னோர் பலரே
புலவர் பாடும் புகழுடை யோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தெனக்
(க0) கேட்ப லெந்தை சேட்சென்னி நலங்கிள்ளி
தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையு மறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து
(கரு) வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி யருளிலர்
கொடாமை வல்ல ராகுக

(இ-ள்.) சேற்றின்கண்ணே வளரும் தாமரைபூத்த ஒள்ளிய நிறத்தையுடைய தாயிதழுருகிய இதழையுடைய மலரினது நிரையைக் கண்டாற்போன்ற ஏற்றத் தாழ்வில்லாத சிறந்த குடியின்கட்பிறந்த வீற்றிருந்த வேந்தரை ஒன்றுங்காலத் துப் புகழும் பாட்டும் உடையோர் சிலர்; தாமரையினது இலையைபோலப் பயின் படாது மாய்ந்தோர் பலர்; புலவராற்பாடப்படும் புகழையுடையோர் ஆகாயத்தின் கண் பாகனாற் செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவரென்று சொல்லு வார் அறிவுடையோர், தாம்செய்யும் நல்வினையைமுடித்தென்று சொல்லக்கேட் பேன்; என்னுடைய இறைவ, சேட்சென்னி, நலங்கிள்ளி! வளர்ந்ததொன்று பின் குறைதலுண்டாதலும், குறைந்ததொன்று பின் வளர்தலுண்டாதலும், பிறந்ததொ ன்று பின் இறத்தலுண்டாதலும், இறந்ததொன்று பின் பிறத்தலுண்டாதலும், கல்விமுகத்தான் அறியாத மடவோரையும் அறியக்காட்டித் திங்களாகியதெய்வம் இயங்குகின்ற தேயத்தின்கண் ஒன்றை மாட்டாராயினும் வல்லாராயினும் வறுமை யுடன் வருத்தமுற்றவந்தோரது உண்ணுதமருங்கைப்பார்த்து அவர்க்கருளி வழங்க வல்லையாகுக; அருளிலராய்க் கொடாமையை வல்லராகுக, கெடாத வலியை யுடைய நினக்குப் பகையாய் மாறுபட்டோர்.—(எ - று.)

நூற்றிதழலரின் நிரைகண்டன்ன உரையும் பாட்டும் உடையோர் சிலரென இயையும். நிரைகண்டன்ன விழுத்திணையென்றுரைப்பினுமமையும். அருளிலர் கொடாமைவல்லராகுகவென்றதனாற்பயன்: அவையுடையோர் தத்தம் பகைவரை வெல்வாராதலால் பகையெதிர்ந்தோர் அவையிலராகவென்பதாம்.

செய்வினைமுடித்தென வானவூர்தி எய்துபவென்ன இயையும். (உஎ)

(உஅ.) சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமுங்
கூனுங் குறளு மூமுஞ் செவிடும்
மாவு மருளு முளப்பட வாழ்நர்க்
கெண்பே ரெச்ச மென்றிவை யெல்லாம்
(ரு) பேதைமை யல்ல தூதிய மில்லென
முன்னு மறிந்தோர் கூறினர் இன்னும்
அதன்றிற மத்தையா னுரைக்க வந்தது
வட்ட வரிய செம்பொறிச் சேவல்
ஏனல் காப்போ ருணர்த்திய கூஉங்
(கO) கானத் தோர்நின் றெவ்வர் நீயே
புறஞ்சிறை மாக்கட் கறங்குறித் தகத்தோர்

(இ - ள்.) மக்கட்பிறப்பிற் சிறப்பில்லாத குருடும், வடிவில்லாத அச்சத்திரளும், கூனும், குறளும், ஊமும், செவிடும், மாவும், மருளுமெனப்பட்ட உலகத்து உயிர் வாழ்வார்க்கு எட்டுவகைப்பட்ட பெரிய எச்சமென்றுசொல்லப்பட்ட இவையெல்லாம் பேதைத்தன்மையையுடைய பிறப்பாவதல்லது இவற்றாற் பயனில்லையென முற்காலத்தும் அறிந்தோர்சொன்னார்; இன்னாதும் அவ்வுறுதியின்பாற்பட்டதை யான்சொல்லவந்தது, வட்டமாகிய வரிசையையுடைத்தாகிய செம்பொறியையுடைய காட்டுக்கோழிச்சேவல் கிளைப்புறங்காப்போரைத் துயிலுணர்த்துவதற்குக்கூவும் காட்டின்கண் உள்ளோர், நின்னுடைய பகைவர்; நீதான் வேலிப்புறத்துநின்ற வேண்டியமாக்கட்கு, அறத்தைக்கருதி, அத்தன்மையோர்தாம் முற்கூறியெறியும், கரும் பகைய, போகடப்பட்ட கழை வாவியகத்துத் தாமரையின் பொலிந்தபூச் சிதற வீழ்த்ததாக, அது கூத்தர் ஆடுகளத்தின்தன்மையாகும், உள்ளாகிய காட்டிடத்தை; ஆதலான், அறனும் பொருளும் இன்பமுமென்னப்பட்ட மூன்றும் செய்வதற் குதவும் பெரும! நினது செல்வம் தொழித்தல் இன்னைப், பற்றாகவாமை.—(எ - று.)

பிண்டமென்பது, மணிபோலப் பிறக்குமது. மாவென்பது, விலங்குவடிவாய்ப் பிறக்குமது. மருளென்பது, அறிவின்றியே மயங்கியிருக்குமது. உறுதியமென்பது, அறம்பொருளின்பங்கள்; அன்றி அறமென்பாருமுளர். நிற்பேற்றுமையென்றகருத்து, சிதடுமுதல் அறிவின்மை பிறப்பொடுகூடாதவாறுபோல, நின் செல்வமும் அறமுதலியனசெய்தற்கேற்றிருப்பச், செய்யாமையாகிய அறிவின்மை மக்கள்யாக்கையிற்பிறந்தும் பயனில்பிறப்பாகப் பண்ணுதலால், நினக்குவரும் பொல்லாங்கைப் போற்றாமையென்பதாம். கானத்தோர்நின்பகைவரென்றவதனாற் பகையின்மைதோற்றிநின்றது. மாவும் மருளுமெனப்படச், சிதடுமுதலாகப் பிறப்பொடுகூட்டப்படாத பெரியவெச்சமெனப்பட்ட எட்டுமெனக் கூட்டியுரைப்பினும் அமையும். இஃது அறஞ்செய்யாதானை அறஞ்செய்கவெனக் கூறியவாறு. அதன் திறமென்பதற்கு அப்பேதைமையென்றாக்கி, அஃது உண்டாகில் வரும்பொல் லாங்கும், அதுபோலுஞ்சுருக்கன்மையுமென்றுரைப்பாருமுளர். (உஅ)

(உகூ.) அழல்புரிந்த அடர்தாமரை
2 ஐயதடர்ந்த நூற்பெய்து,
3 புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல்
4 பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப்,
5 பாண்முற் றுகநின் னாண்மகி ழிருக்கை!—
6 பாண்முற் றொழிந்த பின்றை மகளிர்

14 ஒழிமடல் விறகிற் கழிமீன் சுட்டு
கரு வெங்கட் டொலைச்சியு மமையார் தெங்கி
16 னிளநீ ருதிர்க்கும் வளமிகு நன்னாடு
17 பெற்றன ருவக்குநின் படைகொண் மாக்கள்
18 பற்றா மாக்களிற் பரிவுமுந் துறுத்துக்
19 கூவை துற்ற நாற்காற் பந்தர்ச்
உ0 சிறுமனை வாழ்க்கையி னொரீஇ வருநர்க்
21 குதவி யாற்று நண்பிற் பண்புடை
22 யூழிற் றாகநின் செய்கை விழவிற்
23 கோடியர் நீர்மை போல முறைமுறை
24 யாடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய
உரு நகைப்புற னாகநின் சுற்றம்
26 மிசைப்புற னாகநீ யோம்பிய பொருளே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

(இ-ள்.) எரியாலாக்கப்பட்ட தகடாகச்செய்த தாமரைப்பூவுடனே ஐதாகத் தட்டிக் கம்பியாகச்செய்த நூலின்கண்ணேயிட்டு அலங்கரித்த தொழிலாற்பொலிந்த பொன்னரியின்ற நல்லமாலையைப் பாறிய மயிரையுடைய கரியதலை பொலிவு பெறச்சூடிப் பாண்சுற்றம் சூழ்வதாக, நினது நாட்காலத்து மகிழ்ந்திருக்கும் ஓலக்கம்; பாண்சுற்றம் சூழ்வொழிந்தபின்னர், நினது உரிமைமகளிருடையதோள் சூழ்வதாக, நின் சாந்துபுலர்ந்தமார்பம்; எப்பொழுதும் வெறுப்பில்லாத அலங்காரத்தையுடைய கோயின்முற்றத்தின்கண்ணே இனிதாக முரசொலிப்பத் தீயோரைத் தண்டஞ்செய்தலும் நடுவுநிலைமையுடையோர்க்கு அருள்பண்ணுதலுமாகிய இடையறாத முறைமையாற், சோம்புதலையுடையையல்லையாகி நல்வினையினது நன்மையும் தீவினையினது நிலைமையும் இல்லையென்றுசொல்லுவோர்க்கு இனமாகாதொழிவாயாக; நெல்விளைந்தவயலிடத்தினதாகிய புள்ளை ஓட்டுவோர் வீழ்ந்த பனங்கருக்காயின்ற விறகாற் கழிக்கண்மீனைச்சுட்டு அதனுடனே வெய்ய மதுவை உண்டுதொலைத்தும் அமையாராய்த் தெங்கினது இளநீரை யுதிர்க்கும் செல்வமிக்க நல்லநாட்டைப் பெற்றுமகிழும் நின்னுடைய படைக்கலம்பிடித்த வீரர் நின்னுடைய பகைவரைப்

ஓரீஇயென்பதனை ஒருவவெனத் திரிப்பினுமமையும். ஈறைம்-பொன்னிற்கு இன்றெனினும், தெரியற்கு அடையாய்நின்றது; இசைமையுமாம். ஆங்கு - அசை. நசைப்புறனாகவென்று உரைப்பாருமுளர்.

இதனாற்சொல்லியது: பண்டைக்கோன்மாக்களும் முறைமுதலாயின தப்பாமற் செய்து இன்புற்றிருக்கும்படி சிறப்புச்செய்யவேண்டுமென்பதாயிற்று. (௨௯)

(௩௦.) செஞ்ஞா யிற்றுச் செலவு மஞ்ஞா யிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்
வளிதிரி தருதிசையும்
வறிது நிலைஇய காயமு மென்றிவை
(௫) சென்றளந் தறிந்தோர் போல வென்று
மினைத்தென் போரு முளரே யனைத்தும்
அறிவறி வாகாச் செறிவினை யாகிக்
களிறு கவுளடுத்த வெறிகற் போல
ஒளித்த துப்பினை யாதலின் வெளிப்பட
(௧௦) யாங்ஙனம் பாடுவர் புலவர் கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியும்
கடற்பஃ றாரத்த நாடுகிழ வோயே!

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.) செஞ்ஞாயிற்றினது வீதியும், அஞ்ஞாயிற்றினது இயக்கமும், அவ்வியக்கத்தாற்சூழப்படும் பார்வட்டமும், காற்றியங்குந் திக்கும், ஓராதாரமுமின்றித் தானேநிற்கின்ற ஆகாயமுமென்றுசொல்லப்பட்ட இவற்றை ஆண்டாண்டுப் போய் அளந்தறிந்தவர்களைப்போல, என்றும் இத்துணையளவை உடையனவென்று சொல்லும் கல்வியையுடையோருமுளர்; அப்பெரியோர் ஞாயிற்றுச்செலவுமுதலாயின அறியும் அறிவானும் அறியாத அடக்கத்தையுடையையாகி, யானை தன்கதுப்பின்கண் அடக்கிய எறியுங்கல்லைப்போல மறைத்தவலியையுடையையாதலான், நின்னை விளங்க எப்படிப் பாடுவர் புலவர்; கூம்புடனே மேற்பூரிக்கப்பட்ட பாய்மாற்றாமல் அதன்மேற்பாரத்தையும் பறியாமல் ஆற்றுமுகத்துப்புகுந்த பெரிய மரக்கலத்தைப் பரதவரும், கள்வருமுதலாகிய தகுதியில்லாதோர் தம்புலத்திற்கு இடையாகிய பெருவழிக்கண்ணே சொரியும் கடலால்வரும் பலபண்டத்தையுடைய நாட்டையுடையோய். - (எ - று.)

31.



செலவென்றது, செல்லப்படும் வீதியை. பரிப்பென்றது, இத்துணை நாழிகைக்கு இத்துணை யோசனை செல்லுமென்னும் இயக்கத்தை. பாய்களையாது பார் தோன்றாதென்றதனால், துறைநன்மை கூறியவாறும். பெருங்கலத்தினின்றென ஐந்தாவதாக உரைப்பினுமமையும்.

(௩௧.) *சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
இருகுடை பின்பட வோங்கிய வொருகுடை
உருகெழு மதியி னிவந்துசேண் விளங்க
௫ நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே;
நுதிமுக மழுங்க மண்டி யொன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே;
போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
௧0 காடிடைக் கிடந்த நாடுநனி சேஎய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
௧௫ வலமுறை வருதலு முண்டென் றலமந்து
நெஞ்சநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே.

திணை - வாகை; துறை - அரசவாகை; மழபுலவஞ்சியுமாம்.
அவனைக் கோவூர்கிழார் பாடியது.

(இ-ள்.) சிறப்புடைமுறைமையாற் பொருளும் இன்பமும் அறத்தின்பின்னே தோன்றும் காட்சிபோலச், சேரபாண்டியருடைய இரண்டுகுடையும் பின்னாக வோங்கிய நினது ஒன்றாகிய வெண்கொற்றக்குடை நிறம்பொருந்திய கலைநிறைந்த திங்கள்போல ஓங்கிச் சேய்மைக்கண்ணே விளங்க நல்லபுகழ்வேட்கையைவிரும்பி வெல்லும்போரினைச்செய்யும் பாடிவீட்டின்கண்ணேயிருத்தலல்லது நின்னகரின்கண் இருத்தலை உடம்படாய், நீ; கோட்டினது நுனைமுகர்தேய மடுத்துப் பகைவரது காவலையுடைய மதிலைக்குத்தும் நின்னுடைய யானைகள் அடங்கா; பூசலென்று கேட்பின், விரும்பும் அணிந்த வீரக்கழலையுடைய மறவர், காடு நடுவேகிடந்த நாடு மிகவும் அரியவாதலால், யாம் போவேமல்லேமென்று கருதார்; ஆதலான், ஓசை

* இப்பாட்டின் [illegible]

யுடைய ஆயக்குலத்தினையோர், கலம்வனைதற்குத், திகிரிக்கண்ணேவைத்த பச்சை மண்ணாகிய, கனத்திரள்போல, அவன்கருத்திற்கொண்ட, முடிவையுடைத்து, இக்குளிர்ந்த மருதநிலத்தையுடைய நாடு.—(ஏ ௩ம.)

பூவாவஞ்சியென்றது, கருவூர்க்குவெளிப்படை. ஒன்றோவென்றது, எண்ணிடைச்சொல். தேர்க்காலென்றது, தேர்க்கால்போலும் திகிரியை.

அவன்கொண்டகுமித்து, இந்நாடு; ஆதலால், வஞ்சியையுந்தருகுவன்; மதுரையையுந்தருகுவன்; ஆதலால், பரிசின்மாக்கள், நாமெல்லாம், அவனைப்பாடுகம் வம்மினோவெனக்கூட்டுக.

தொன்னிலக்கிழமையென்று பாட்டுமோதுவாருமுளர். (௩௨.)

(திணை.) கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியு மாயமக

* நின்றக்கும்பொருளாகவென்றும் பிரதிபேதமுண்டு.

தயிர்கொடு வந்த தசும்பு நிறைய
ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்
௫ குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப உவந்தனர் பெயருந்
தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்
ஏழெயிற் கதவ மெறிந்து கைக்கொண்டுநின்
பேழ்வா யுழுவை பொறிக்கு மாற்றலை!
௧௦ பாடுநர் வஞ்சி பாடப் படையோர்
தாதெரு மறுகிற் பாசறை பொலியப்
புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்துஞ்
௧௫ செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை
வல்லோன் றைஇய வரிவனப் புற்ற
அல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்பக்
காம விருவ ரல்லது யாமத்துத்
தனிமகன் வழங்காப் பனிமலர்க் காவின்
௨௦ ஒதுக்கின் றிணிமணற் புதுப்பூம் பள்ளி
வாயின் மாடந் தொறுமை விடை வீழ்ப்ப
நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

(இ - ள்.) காட்டின்கண்ணே தங்கும் வாழ்க்கையையுடைய சினம்பொருந்திய நாயையுடைய வேட்டுவன் மானினது தசையைச்சொரிந்த கடகமும் இடைமகள் தயிர்கொண்டுவந்த மிடாவும் நிறைய ஏராணுழுதுண்டுவாழ்வாரது பெரிய மனையின் பெண்மகளிர் குளத்தின்கீழ்விளைந்த களத்தின்கட்கொள்ளப்பட்ட வெண்ணெல்லை முகந்துகொடுப்ப உவந்துமீளும் தென்றிசைக்கட் பொதியின்மலையையுடைய பாண்டியனது நல்லநாட்டுள்ளும் ஏழாகிய அரணின்கட்கதவத்தையழித்துக் கைக்கொண்டு நினது பெரியவாயையுடைய புலியைப்பொறிக்கும் வலியை; ஆதலான், நின்னைப் பாடும்புலவர் நினது மேற்செலவைப்பாடப் படைக்கலத்தினையுடையோர் தாதாகிய எருப்பொருந்திய மறுகினையுடைய பாசறைக்கண்ணே பொலிவுபெறப் புலராத பசியஇலையை இடையிட்டுத்தொடுக்கப்பட்ட மலராத முகையினையுடைய மாலையினது பந்தைக்கண்டாற்போன்ற தசையோடுகூடிய பெருஞ்சோற்றுத்திரளையைப் பாண்சுற்றத்தையூட்டும் தலைமையையுடைத்து, நினது வெய்ய முனையாகிய இருப்பிடம்; தொழில்வல்லோனாற் புனைந்துசெய்யப்பட்ட எழுதிய அழகு பொருந்திய அல்லிப்பாவை (அல்லியமென்னும் கூத்தையாடும்) அழகையொப்ப

மலியவென்றும் பாடம்.



18.

அன்பினையுடைய துணைவனும் துணைவியுமாகிய இருவரல்லது இடையரிகத்தின் கண் தனிமகன்வழங்காத குளிர்ந்த மலையையுடைய காவின்கண் இயங்குதற்கினிய தெரிந்த மணலையுடைய புதிய பூவையுடைய சாலையினது வாயிலின்கண் மாடந்தோறும் செம்மரிக்கிடாயைப்படுக்க நீ அவ்விடத்து எடுத்துக்கொண்ட விழவினும் பல.—(எ - று.)

கன்றுடேன்றுமென்ற உம்மை - சிறப்பும்மை. அல்லிப்பாவையாடுவனப்பென்றது, ஆண்கோலமும் பெண்கோலமுமாய அவ்விருவருமாடுங்கூத்தை. படையோர் பாசறை பொலியவென்பதற்குப் படையோரது பாசறை பொலிவுபெற வென்று உரைப்பினுமமையும். பாசிலைமலையவென்று பாடமோதுவாருமுளர். தனிமகன்வழங்காவென்றது, தனித்துவழங்கின் அப்பொழில் வருத்துமென்பது. களத்துக்கொள்வெண்ணெலென்பது, களக்கொள்வெண்ணெலெனத் தொக்கது.

முகந்தனர்கொடுப்ப, உவந்தனர்பெயருமென்பன - வினையெச்சமுற்று.

உழுவைபொறிக்கு மாற்றலையாகலின், பாண்கடும்பருத்தும் நின்வெம்முனை யிருக்கை நீ கொண்ட விழவினும் பலசெம்மற்றெனக்கூட்டுக.

விழவென்பது, சிறுசோற்றுவிழவினை; வேள்வியென்றுரைப்பினுமமையும்.()

(௩௪.) ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
௫) நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
வரம்பா டிற்றே யாயிழை கணவ*
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
௧0) பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
௧௫) ககலாச் செல்வ முழுவதுஞ் செய்தோ
னெங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வ
னியானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
௨0) சான்றோர் செய்த நன்றுண் டாயி
னிமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்

---

* அறம்பாடின்றேயெனவும் பாடம்.

22 கொண்டன் மாமழை பொழிந்த
23 நுண்பஃ றுளியினும் வாழிய பலவே!

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடியது.

(இ-ள்.) ஆனினது முலையாற்பெறும் பயனைக்கெடுத்த தீவினையாளர்க்கும் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய பெண்டிரது கருப்பத்தை அழித்தோர்க்கும் பார்ப்பனரைப்பிழைத்த கொடுந்தொழிலையுடையோர்க்கும் அவர்செய்த பாதகத்தினை ஆராயுமிடத்து அவற்றைப்போக்கும்வழியுமுளவெனவும், நிலம் கீழ்மேலாம் காலமாயினும் ஒருவன்செய்த நன்றியைக் கொன்றோர்க்கு நரகம்நீங்குதலில்லையெனவும் அறநூல் கூறிற்று; தெரிந்த ஆபரணத்தையுடையாள் தலைவ! காலையாகிய அந்திப்பொழுதும் மாலையாகிய அந்திப்பொழுதும் புறவினது கருவாகிய முட்டைபோன்ற புல்லிய நிலத்தது வரகினது அரிசியைப் பாலின்கட்பெய்து அடப்பட்ட சோற்றைத் தேனொடுகலந்து உண்டு குறிய முயலினது கொழுவிய சூட்டிறைச்சியைத் தின்ற எஞ்சுற்றத்தோடுகூட இலங்குதமர மொய்த்த அகன்ற இடத்தையுடைய பொதியிற்கண் ஒன்றனையும் மறைத்தலில்லாத உள்ளத்தாலே வேண்டியவார்த்தைகளைப் பலகாலுங்கூறிப் பெரிய தட்டியாகிய கொழுவியசோற்றை அருந்திய பாணர்க்கு நீங்காதசெல்வமெல்லாவற்றையும் செய்தோன் எம்முடையவேந்தனாகிய வளவன் வாழ்வானாகவென்றுசொல்லினது பெருமைபொருந்திய வலியதாளைப் பாடிற்றிலேனாயின், வாழ்க்கைக்கு அலகாகிய பலகதிரையுடையசெல்வன் தோன்றாது தலறியான்; யானோ எளியேன்; பெரும! இந்தவுலகத்தின்கண் சான்றோர்களால் அமைந்தோர்செய்த நல்வினையுண்டாயின், இமயமலையின்கண்ணே இரண்டு இனிய ஓசையைப்பயிற்றிக் கிழகாற்றொடுவரும் பெரிய முகில்சொரிந்த நுண்ணிய பலதுளியினும் பலகாலம் வாழ்வாயாக. (எ - று.)

நிலம்புடைபெயர்வதாயினுமென்பதற்கு ஊழிபெயருங்காலத்து யாவருஞ்செய்த இருவினையுநீங்குதலின், அக்காலத்தும் செய்ந்நிகொன்றோர்க்கு உய்தியில்லென்றும், நிலத்துள்ளாரியாவரும் இவன்கூற்றிலே நிற்பாராயினுமென்றும் உரைப்பாருமுளர். புன்கம் இவன்பாற் செல்வதற்குமுன்பு பெற்ற உணவாகவும், அமலைக் கொழுஞ்சோறு இவன்பாற்பெற்ற உணவாகவுங்கொள்க. அன்றிச் சென்ற இடத்தோறும்பெற்ற உணவாகவுரைப்பினுமமையும். மன்றத்துச் சுடுகிழித்த ஒக்கலொடுகூட வேண்டுமொழிபயிற்றி ஆர்ந்தபாணர்க்கென்க்கூட்டுக. பாணர்க்கெனத் தம்மைப் பிறர்போலக் கூறினார்.

ஆயவெழுவகை, வழுவுயிர்கொலைப்பொருட்கு உய்தியில்லையென அறம்பாடிற்று ; ஆத லால், பாணர்க்குச் செல்வமுழுவதுஞ்செய்தோன், எங்கோன், வளவன் வாழ்கவெ ன்று காலையந்தியும் மாலையந்தியும், நின்றுன்பாடேனாயின், பல்கதிர்ச்செல்வன் படு பரியான் ; பெரும, யானோ தஞ்சம், சான்றோர்செய்த நன்றுண்டாயின், நுண்டுளி யினும் பலகாலம் வாழ்வாயாகவெனக்கூட்டுக.

கோவதைமுதலாயின, வாக்காற்சொல்லவும்படாமையின், ஆன்முலையறுத்த வெனவும், மகளிர்கருச்சிதைத்தவெனவும், பார்ப்பார்த்தப்பியவெனவும் மறைத்துக் கூறப்பட்டன.

35.

இது, பரிசில்பெற்றுப்போகின்றானை நீ எம்மை நினைத்துவருவையோவென்ற ற்கு இவ்வாறுசெய்த நின்னை, வளவன்வாழ்கவென்று பாடேனாயின், யானிருக்குமிட த்துப், பல்கதிர்ச்செல்வன், படுதலறியான்; அதனால் இம்மையின்கட்பெறுவனை வும், செய்ந்நன்றிகொன்றோர்க்கு உய்தியில்லையென்லே மறுமையின்கண் நரகம்புகு வேனென்னவும் கூறியதாகக்கொள்க. (௩௪)

(௩௫) நளியிரு முந்நீ ரேணி யாக
2 வளியிடை வழங்கா வானஞ் சூடிய
3 மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
4 முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
(௫) அரசெனப் படுவது நினதே, பெரும! —
6 அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்,
7 இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்,
8 அந்தண் காவிரி வந்து கவர்பூட்டத்
9 தோடுகொள் வேலின் றோற்றம் போல
௧௦) *ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கு
நாடெனப் படுவது நினதே யத்தை! ஆங்க
12 நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே!
13 நினவ கூறுவ லெனவ கேண்மதி!
14 அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து
௧௫) முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்
16 டுறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே
17 ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
18 மாக விசும்பி னடுவுநின் றாங்குக் —
19 கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
௨௦) வெயின்மறைக் கொண்டன்றோ, வன்றே; வருந்திய
21 குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ!
22 வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற் றுக்கிடப்பக்
23 களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
24 வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
௨௫) பொருபடை தரூஉங் கொற்றமு முழுபடை
26 யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே;

டும்; அவ்வாறு பெயல்பெறுதற்கின்றவாறும். அன்றி, இதற்கு முறைவேண்டு பொழுதிற் பதனெளியோர் ஈண்டு உறைவேண்டுபொழுதிற் பெயல்பெற்றோரோ டொப்பரென்று உரைப்பாருமுளர். அத்தையும், ஆங்கவும், மதியும் - அசைநிலை; வினவ வினவென ஈற்றுநின்ற அகரங்கள் - செய்யுள்நோக்கி விரிக்கப்பட்டன.

நாடுகெழுசெல்வத்துப் பீடுகெழுவேந்தே, நினவ கூறுவல்; எனவகேண்மதி; குடை வருந்தியகுடி மறைப்பதுவாகும்; கூர்வேல்வளவ, பதனெளியோர் உறைவேண்டுபொழுதிற் பெயல்பெற்றோராவர்; ஆகையால், நீயும் அவ்வாறு காலும் எளியையாய்க் கொற்றமும் ஈன்றதன்பயனென்றருதிக் காவலர்ப்பழிக்கும் இக்கண்ணகன்ஞாலமென்றுகொண்டு, நொதுமலாளர், பொதுமொழிகொள்ளாது, பாரமோம்பிப் புறந்தருகுவையாயின்; நின்னடி புறந்தருகுவர், அடங்காதோரென்றமையால், செவியறிவுறூஉவாயிற்று. (௩௫)

(௩௬.) 1 அடுநை யாயினும் விடுநை யாயினும்
2 நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்
3 செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
4 பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடுந்
(௫) தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
6 கருங்கைக் கொல்ல னரஞ்செ யவ்வாய்
7 நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து
8 வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறுங்
9 கடிமரந் தடியு மோசை தன்னூர்
௧0) நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
11 ஆங்கினி திருந்த வேந்தனொ டீங்குநின்
12 சிலைத்தார் முரசங் கறங்க
13 மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே.

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.

3 அவன்கருவூர் முற்றியிருந்தானை ஆலத்தூர்கிழார் பாடியது.

(இ - ள்.) கொல்வாயாயினும் கொல்லாது ஒழிவாயாயினும் அவற்றால் நினக்கு வரும் உயர்ச்சி யாம் சொல்லவேண்டா; நீயே எண்ணியறிவை; செறிந்த உள்ளிடுபருக்கைகளையுடைய சிலம்பினையும், நீண்ட, கோற்றொழிலாற், செய்யப்பட்ட குறிய வளையினையுமுடைய, மகளிர் பொன்னாற்செய்யப்பட்ட கழங்கின் வேறுகை போல உயர்ந்த எக்கர்மணலின்கணேயிருந்து விளையாடும் அழகுமையையுடைய குளிர்ந்த ஆன்பொருநையினது வெளிய மணற்சிதற வலியகையையுடைய கொல்லன் அரத்தாற் கூர்மைசெய்யப்பட்ட அழகிய வாயினையுடைத்தாகிய நெடிய கையையுடைய கோடரிவெட்டுதலான் நின்றநிலைகலங்கிப் பூ நாறுகின்ற நெடிய கொம்புகள் தனிப்பக் காக்கப்படுங் காவன்மரங்களை வெட்டுமோசை தன்னுடைய

வென்பது தோன்றத்தவுடைத்து; அதனால், அடுகையாயினும் விடுகையாயினும் நின் புரைமை நீ அளந்தறிதியென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

மகளிர் தெற்றியாடும் பொருநனையென்றகருத்து: இங்ஙனம் இளமகளிர் கழங்காடும் அணுமையதாயினும் புறப்பட்டுப் போர்செய்யாத அவன் வலியின்மைதோற்றிநின்றது. தெற்றியாடும் தன்னூரென இயைப்பினுமமையும்.

மேற்சென்றோனைச் சிறுசெய்துமிட்டலின், இது திணைவஞ்சியாயிற்று. (௩௬)

(௩௭.) நஞ்சுடை வாலெயிற் றைந்தலை சுமந்த
வேக வெந்திற னாகம் புக்கென
விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங்கோட்டுப்
பெருமலை விடரகத் துருமெறிந் தாங்குப்
௫ புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற்
சினங்கெழு தானைச் செம்பியன் மருக
கராஅங் கலித்த குண்டுகண் ணகழி
இடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉங்
௧0 கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சிச்
செம்புறழ் புரிசைச் செம்மன் மூதூர்
வம்பணி யானை வேந்தகத் துண்மையின்
நல்ல வென்னாது சிதைத்தல்
வல்லையா னெடுந்தகை செருவத் தானே.

*திணை - வாகை; துறை - அரசவாகை; முதல்வஞ்சியுமாம்;
அவனை †மாறோக்கத்துநப்பசலையார் பாடியது.

(இ - ள்.) நஞ்சையுடைத்தாகிய வெளிய பல்லினையுடைய ஐந்துபடம்பொருந்திய தலையைச்சுமந்த சினம்பொருந்திய வெய்ய திறலையுடைய பாம்பு புக்கதாக வானம் தீப்பிறக்கும்பரிசு முருகிப் பசிய கொம்பினையுடைய பெரிய மலைமுழையின்கண்ணே இடி வீழ்ந்தெறிந்தாற்போல, புறவுற்ற துயரத்தைக் கெடுத்த வெள்வேலோடு சினம்பொருந்திய படையையுடைய செம்பியன்மரபிலுள்ளாய்! கராம்செருக்கிய

* திணை - உழிஞை; துறை - குற்றுழிஞையென்றும் பிரதிபேதமுண்டு.
† மாறோகமென்றும் பிரதிபேதமுண்டு.

சூழ்ந்த இடத்தையுடைய அகழியினையும், இடம் கரிதாகிய ஆழத்தின்கண் சேரத் திரண்டோடி இடையாமத்து ஊர்காப்பாருடைய விளக்குநிழலைக் கவரும் கடிய மாறுபாடுபொருந்திய முதலையையுடைய நீர்மிக்க மடுவினையும், செம்புபொருவும் மதிலையுமுடைய தலைமைபொருந்திய பழைய ஊரினுள்ளே கச்சணிந்த யானையையுடைய அரசுண்டாகலின், அவற்றை நல்லவென்றுபாராது அழித்தலைவல்லையா யிருந்தாய்; பெருந்தகாய், போரின்கண். — (எ - று.)

இலஞ்சியையுடைய அகழியென மாறிக்கூட்டினுமமையும்; இப்பொருட்குக் கராம் கலித்தலை அகழிக்கு அடையாக்குக. கராம் - முதலையுள் ஒருசாதி.

வி. செம்பியன்மருக! நெடுந்தகாய்! விடரகத்து நாகம்புக்கென உருமெறிந்தாங்கு மூதூரகத்து வேந்துண்மையின், செருவத்துச் சிதைத்தல் வல்லையென மாறிக் கூட்டுக.

புன்னுறு புண்கண் தீர்த்த பேரருளினோன் மருகனையும், செருவின்கண் இவற்றை நல்லவென்று பாராது அழித்தல் வல்லையாயிருந்தாயென, அவன்மறம் வியந்து கூறியவாறு. ஐந்தலையென்றதற்கு ஐந்துதலையெனினுமமையும். இடங்கருங்குட்டமென்பதனுள், உம்மையை அசைநிலையாக்கி, இடங்கரையுடைய குட்டமென்றுரைப்பாருமுளர். இடங்கரிட்டத்தென்று பாடமோதுவாருமுளர். (௩௭)

---

(௩௮.) *வரைபுரையு மழகளிற்றின்மிசை
வான்றுடைக்குந் தகையபோல
விரவுருவின கொடிநுடங்கும்
வியன்றானை விறல்வேந்தே!
(௫) நீ, உடன்று நோக்கும்வா யெரிதவழ
நீ, நயந்து நோக்கும்வாய் பொன்பூப்பச்
செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்
வேண்டியது விளைக்கு மாற்றலை யாகலி
(௧0) னின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த
வெம்மள வெவனோ மற்றே யின்னிலைப்
பொலம்பூங் காவி னன்னாட் டோருஞ்
செய்வினை மருங்கி னெய்த லல்லதை
யுடையோ ரீதலு மில்லோ ரிரத்தலுங்
(௧௫) கடவ தன்மையிற் கையற வுடைத்தென
வாண்டுச்செய் நுகர்ச்சி யீண்டுங் கூட்டி

---

* இச்செய்யுள் புகழ்ச்சிக்கண்வந்த செந்துறைப்பாடாண் பாட்டென்றும் [தொல், பொரு, புறத்திணையியல், உ௯ - ம் சூத்திரவுரை], இதனுள், 'வரைபுரையு மழகளிறு' என்பதை, முதற்குறித்தேவந்த உவமையென்றும் [தொல், பொரு,

17 னின்னாட் டுள்ளுவர் பரிசிலர்
18 ரொன்னார் தேஎத்து நின்னுடைத் தெனவே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.
அவனை 'எம்முள்ளீர் எந்நாட்டீர்' என்றற்கு ஆவூர்மூலங்கிழார் பாடியது.

(இ - ள்.) மலையையொக்கும் இளங்களிற்றின்மேல் ஆகாயத்தைத்தடவும் கூறுபாட்டையுடையனபோல விரவின பலநிறத்தையுடையனவாகிய கொடிகள் அசைந்துதோன்றும் பரந்த படையையுடைய விறல்வேந்தே! நீ முனிந்துபார்க்குமிடம் தீப்பரக்க, நீ அருளிப்பார்க்குமிடம் பொன்பொலிய, செஞ்ஞாயிற்றின்கண்ணே நிலவுண்டாகவேண்டினும், வெளிய திங்களின்கண்ணே வெயிலுண்டாகவேண்டினும், நீ வேண்டியபொருளை உண்டாக்கும் வலியையுடையையாகலின், நினது நிழற்கண்ணே பிறந்து நினது நிழற்கண்ணே வளர்ந்த எமது நினைவெல்லை சொல்லவேண்டுமோ? வேண்டாவன்றே; இனியநிலையையுடைத்தாகிய பொற்பூப்பொருந்திய கற்பகக்காவையுடைய நல்ல விண்ணுலகத்தவரும் தாஞ்செய்த நல்வினையாலுள்ள இன்பத்தின்பக்கத்தைப் பொருந்துவதல்லது, செல்வமுடையோர் வறியோர்க்குவழங்குதலும், வறியோர் செல்வமுடையோர்பாற் சென்றிரத்தலும் ஆண்டுச் செய்யக்கடவதல்லாமையான், அது செயலறவுடைத்தெனக்கருதி, அவ்விடத்துநுகரும் நுகர்ச்சி இவ்விடத்தும்கூடுதலான், நின்னாட்டுள்ளவர் பரிசிலர் ஆதலால், பகைவர்தேயத்திருந்தும், நின்னுடைய நின்னையுடைத்தென்றுகருதி. எ - று.

மற்று - அசை.

வேந்தே! நீ வேண்டியதுவிளைக்கும் ஆற்றலையாகலின், விண்ணுலகத்து நுகர்ச்சி, சண்டுங்கூடலின், ஒன்னார்தேயத்திருந்தும், பரிசிலர் நின்னுடை நின்னையுடைத்தென்று, நின்னாட்டையுள்ளுவர்; ஆதலான், 'நின்னிழற்பிறந்து நின்னிழல்வளர்ந்த எம்மளவு எவனோ'வென மாறிக்கூட்டுக. (௩௮)

(௩௯.) புறவின் அல்லல் சொல்லிய கறையடி
— 2 யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்
— 3 கோனிறை துலாஅம் புக்கோன் மருக
— 4 ஈதனின் புகழு மன்றே சார்தல்

4 கோடுகூடு மதியம் முகிழ்நிலா விளங்கு
ரு மையன் மாலையாங் கையறு பினையக்
6 குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
7 வடமலைப் பெயர்குவை யாயி னிடையது
8 சோழநன் னாட்டுப் படினே கோழி
9 யுயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ
கo வாயில் விடாது கோயில் புக்கெம்
11 பெருங்கோக் கிள்ளி கேட்க விரும்பிசி
12 ராந்தை யடியுறை யெனினே மாண்டநி
13 னின்புறு பேடை யணியத்த
14 னன்புறு நன்கல நல்குவ னினக்கே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.
கோப்பெருஞ்சோழனைப் *பிசிராந்தையார் பாடியது

(இ - ள்.) அன்னச்சேவலே, அன்னச்சேவலே, கொல்லுதலைப்பொருந்திய வெற்றியையுடைய அடுபோரண்ணல் தன்னாட்டைத் தலையளிசெய்யும் விளங்கிய முகம்போல இரண்டுபக்கமும் வந்துபொருந்தியமதியம், அரும்புகிலாவிளங்கும் தமியோராயினார்க்கு மயக்கத்தைச்செய்யும் மாலைப்பொழுதின்கண் யாம் செயலற்று வருந்தக் குமரியாற்றினது பெரிய துறைக்கண்ணே அயிரையைமேய்ந்து வடதிசைக்கண் இமயமலைக்கண்ணே போகின்றாயாயின், இவ்விரண்டிற்குமிடையதாகிய நல்ல சோழநாட்டின்கண் சென்றுபொருந்தின், உறையூரின்கண் உயர்ந்தநிலையையுடைய மாடத்தின்கண்ணே நினது குறும்பறையோடுதங்கி, வாயில்காவலர்க்கு உணர்த்தி விடாதே நடையின்றிக் கோயிற்கண்ணேபுக்கு எம்முடைய பெருங்கோவாகிய கிள்ளிகேட்பப், பெரியபிசிரென்னுமூரின்கண் ஆந்தையுடைய அடிக்கீழென்று சொல்லின், மாட்சிமையையுடைய நினது இன்புறும் பேடைபூணத் தனது விருப்ப முறும் நல்ல அணிகலத்தையளிப்பன், நினக்கு. (எ - று.)

'ஆடுகொள்வென்றி' என்பதற்கு, வென்றிமிக்க வென்றியெனினுமமையும். குறும்பறையென்றது, பேடையை. 'வாயில்விடாது' என்றதற்கு வாயில் காவலர் விடவேண்டாதெனினுமமையும். முகிழ்நிலாவென்பது, ஒருசொன்னடைத்தாய் மதியம் முகிழ்நிலாவிளங்குமென முதல்வினைகொண்டது; மதியம் முகிழ்க்கும் நிலாவெனினுமமையும். ஆந்தையடியுறையென்பதற்கு, ஆந்தை நின் அடிக்கீ

௧௦ வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனு மன்னெயி லாந்தையு முரைசா
லந்துவஞ் சாத்தனு மாதனழிசியும்
வெஞ்சின வியக்கனு முளப்படப் பிறரும்
௧௫ கண்போ னண்பிற் கேளிரொடு கலந்த
வின்களி மகிழ்நகை யிழுக்கியா னொன்றோ
மன்பதை காக்கு நீள்குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇப் பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே.

திணை - காஞ்சி; துறை - வஞ்சினக்காஞ்சி.

ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன்பாட்டு.

(இ - ள்.) சிங்கம்போலச் சினந்து மீளாத மேற்கோள்பொருந்திய உள்ளத்தையும் மிகைத்துச்செல்லும்படையையுமுடைய வேந்தர், தம்மில் ஒப்பக்கூடியத்து என்னொடுபொருவேமென்றுசொல்லுவர்; அவ்வேந்தரைப் பொருதற்கரியபோரின்கண்ணே அலறப்பொருது தேருடனே அவருடைந்தோடும் புறக்கொடையைக் கண்டிலேனாயின், எனக்குச்சிறந்த பெரியவாய் முகத்தொடுபொருந்தின மையுண்ட கண்ணினையுடைய இவளினும், நீங்குவேனாக; அறமானது நிலைகலங்காத அன்பினையுடைய அவைக்களத்து அறத்தின்திறப்பாடில்லாத ஒருவனைவைத்து முறைகலங்கிக் கொடுங்கோல்செய்தேனாகுக; மிக்கபுகழையுடைய வையையாறுசூழப்பட்ட செல்வம்பொருந்திய ஊர்களிற் பொய்யாத புதுவருவாயையுடைய மையலென்னும் ஊர்க்குத்தலைவனாகிய மாவனும், நிலைபெற்ற எயிலென்னும் ஊரையுடைய ஆந்தையும், புகழமைந்த அந்துவஞ்சாத்தனும், ஆதனழிசியும், வெய்யசினத்தையுடைய இயக்கனுமென இவருட்படப் பிறரும் கண்போலும் நண்பினையுடைய நட்டாரோடுகூடிய இனிய செருக்கையுடைய மகிழ்நகையைத் தப்பியவனாகி மன்னுயிரையும் பாதுகாக்கும் அரசர்குலத்திற்சிறந்த பாண்டிநாட்டைக் காக்கும் காவலினீங்கிப் பிறருடைய வன்புலங்களைக்காக்கும் காவற்கண்ணே, இக்குடிப்பிறப்பினீங்கி, யான்பிறப்பேனாகுக. (எ - று.)

'மெலிகோல்செய்தேனாகுக' என்பதனுள் ஆகுகவென்பது, எங்குந்தந்துரைக்கப்பட்டது. ஒன்றோவென்பது, எண்ணின்கண்வருவதோரிடைச்சொல். அதனை முன்னும்பின்னுங்கூட்டுக. (எக)

(எ௨.) நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளைய னிவனென வுளையக் கூறிப்

(எ௩.) மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி,
ஈயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்;
இன்னுயி ராயினுங் கொடுக்குவெ னிந்நிலத்
(௫) தாற்ற லுடையோ ராற்றல் போற்றாதென்
னுள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
வுய்ந்தனன் பெயர்தலோ வரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
௧0) வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய
தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தன் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே.

திணையும் துறையும் அவை.
சோழன் *நலங்கிள்ளிபாட்டு.

(இ-ள்.) மெல்லவந்து, எனது, நல்ல, அடியையடைந்து, எமக்கு, ஈயவேண்டுமென்று, தாழ்ந்திரப்பாராயின், அவர்க்குச், சீர்மையையுடைய முரசுபொருந்திய பழையதாய்வருகின்ற, உரிமையையுடைய, எனது அரசாட்சிகொடுத்தலோ, எளியது; இனிய உயிரேயாயினும், கொடுப்பேன், இந்நிலத்தின்கண்; அமைச்சர் படைத்தலைவர்முதலாகிய வலிமையையுடையோரது, வலிமைப் பாதுகாவாது, என்னுள்ளத்தையிகழ்ந்த, அறிவில்லாதோன் யாவர்க்கும்விளங்கத், துயில்கின்ற, புலியை இடறிய, குருடன்போலப், பிழைத்துப்போதலோ, அரிது; மூங்கிலைத்தின்னும் வலிமையையுடைய யானையினது, காலின்கண்ணகப்பட்ட வலிய, இணியமூங்கிலது, நீண்ட, முளையையொப்ப, மேற்சென்று, அவ்விடத்து, வருந்தும்படி, பொருதிலேனாயின், கூடிய தீதில்லாத, நெஞ்சத்தாற் காதல்கொள்ளாத, பலவகைப்பட்ட, கரியகூந்தலையுடைய, பொதுப்பெண்டிரது, பொருந்தாத, புணர்ச்சியிடை, என்மாலை, துவள்வதாக.—
(எ-று.)

'இரக்குவிநாயின்' என்று பாடமோதுவாருமுளர். நிலைக்காதல்கொள்ளாவென இயைப்பினுமமையும். உள்ளிமென்றது, உள்ளத்தாற்சூழும் சூழ்ச்சியை. தனமேம்பாடு கூறுகின்ற இடமாதலின், கல்லடியென்பது, தற்புகழ்தலென்னுங்குற்றமாகாது. (எக)

(எசு.) குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்
மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபத

* நல்லுருத்திரனெனவும் பிரதிபேதமுண்டு.

(௫) மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
6 தாமிரந் துண்ணு மளவை
7 யீன்ம ரோவிவ் வுலகத் தானே.

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக்காஞ்சி.

சேரமான்கணைக்காலிரும்பொறை சோழன்செங்கணானோடு போர்ப்புரிந்துப் பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற்கோட்டத்துச் சிறையிற்கிடந்து தண்ணீர் தாவென்று பெறாது பெயர்த்துப்பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சியபாட்டு.

(இ - ள்.) பிள்ளை இறந்து பிறப்பினும் தசைத்தடியாகிய மணை பிறப்பினும் அவற்றையும் ஆளல்லவென்று கருதார் வாளாக்குதலில் தவிரார் அரசராயிருக்க, புலகையர்வாளாற்படாது சங்கிலியாற்பிணிக்கப்பட்டநாய்போலப் பிணித்துத் துன்பத்தைச்செய்து இருத்திய கேளல்லாதகேளிருடைய உபகாரத்தால்வந்த தண்ணீரை, இரந்துண்ணக்கடவேமல்லேமென்னும் மனவலியின்றி வயிற்றின்கட்டீயை ஆற்றவேண்டித் தாமேயிரந்துண்ணும் அளவினையுடையாரை அவ்வரசர் பெறுவாரோ இவ்வுலகத்தின்கண். — (எ - று.)

அளவையுடையாரை அளவையென்றார். இதன்கருத்து: சாக்குழவியும் ஊன்பிண்டமுமென இவற்றின்மாத்திரையும் பெற்றிலேமெனப் பிறர்மேல் வைத்துக் கூறியவாறு. கேளல்கேளிரென்றது, சிறைக்கோட்டங்காவலரை.

அன்றி, இவனாண்மையுடையனல்லனென்று வாளாற்கொல்லாராய்த் தொடர்ப்படுஞமலிபோல இடர்ப்படுத்திருத்திய கேளல்கேளிர் வேளாண்சிறுபதத்தை மதுகையின்றி வயிற்றுத் தீத்தணிக்கவேண்டித் தாம் இரந்துண்ணுமளவாகக் குழவி செத்துப் பிறப்பினும் ஊன்தடி பிறப்பினும் இவ்வுலகத்து மக்கட்பெறுவாருளரோ வென உரைப்பினுமமையும்.

அரசர்க்கு மானத்தின்மிக்க அறனும் பொருளும் இன்பமுமின்மையின், இது முதுமொழிக்காஞ்சியாயிற்று. (எச)

(எரு.) மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
2 பாறர வந்த பழவிறற் றாயம்
3 எய்தின மாயி னெய்தினஞ் சிறப்பெனக்
4 குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்
(௫) சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே!

பொருவாரிய ஆண்மை ... கொள்ளையுமெய்தாது என, இகழ்ந்துவந்த நிலையில்லாத வீரர், புறக்கொடை கண்ணராய், நின்றவிடத்து நில்லாது புறந்தேபோக; அவரை இப்போர்க்களத்தின்கண்ணே கொன்றிடேனும், உடம்படாருய், அவ்விடத்து அவர்
10 மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய மகளிர் நாணினராய் இறந்துபடத் தம் தையருள்ளேயவாகிய தங்களூரிடத்துத் தெளிந்த போர்ப்பறையொலிப்பச்சென்று அவ்விடத்தே கொன்றான்.—(எ - று.)

தந்தைதம்மூரொன்றதனை, "எவ வியனர் தாய்வயிறு கரிப்ப" என்றாற்போலக் கொள்க. தந்தைதம்மூரென்றது, தாம் தோற்றிச்செய்த நகரியன்றி உறையூரும் கருவூருமுதலாகிய வூர்களை.

(எஅ)

(எகூ.) மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி
2 மன்ற வேம்பி னொண்குழை மலைந்து

* மதனுடை நோன்றாளென்றும் பாடம்.

தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி
வெம்போர்ச் செழியனும் வந்தனனெதிர்ந்த
(ரு) வம்ப மள்ளரோ பலரே
எஞ்சுவர் கொல்லோ பகறவச் சிறிதே.

திணையும் துறையும் அவை.
அவனை, அவர் பாடியது.

(இ - ள்.) தனது பழையநகர்வாயிற்கட் குளிர்ந்த பொய்கையின்கண்ணே மூழ்கி மன்றத்திடத்து வேம்பினது ஒள்ளிய தளிரைச்சூடித் தெளிந்த ஓசையையுடைய பறைமுன்னாகக் களிறுபோலப் பெருமிதத்தோடு நடந்து வெய்ய போரையுடைய செழியனும்வந்தான்; அவனொடுபகைத்து நிலையில்லாதமறவர் பலரே; பகற்பொழுது மிகச்சிறிதாதலால், அவருட் சிலர் படாதொழியவுங்கூடும். (எ - று.)

போர்மடத்தையைப் புணர வருகின்ற கன்னிப்போராதலாற் பனிக்கயமண்ணி யென்றார். கிணைமுன்னர்வருதல் - யானைக்கும், இவனுக்கும் ஒக்கும். (எகூ)

(அ௦.) இன்கடுங் கள்ளி னாமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகான் மார்பொதுங் கின்றே யொருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
(ரு) நல்கினு நல்கா னாயினும் வெல்போர்ப்
போரருந் தித்தன் காண்கதி லம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல
இருதலை யொசிய வெற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே.

திணை - தும்பை; துறை - எருமைமறம்.
சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி முக்காவனாட்டு ஆமூர்மல்லனைப் பொருது அட்டுநின்றானைச் சாத்தந்தையார் பாடியது.

(இ - ள்.) இனிய, அழன்ற, கள்ளினையுடைய, ஆமூரிடத்து வலியையுடைய மல்லனது மிக்கவலியைக்கெடுத்து ஒருகால் மண்டியாக மார்பிலே மடித்துவைத்து ஒருகால் அவன்செய்கின்ற உபாயத்தைவிலக்கி, முதுகின்கண்வளைத்துப், பசித்து மூங்கிலைத் தின்றற்குமுயலும் யானையைஒப்பத், தலையுங் காலுமாகிய இரண்டிடமும் முறியமோதி, அக்களத்தின்கட்புக்க அம்மல்லனை எதிர்த்துநின்றுகொன்றநிலையைக், கண்டால் உவப்பினும் உவவானாயினும், இவன்றந்தையாகிய வெல்லும் போரினையுடைய பொருதற்கரிய தித்தன்காண்பானாக. (எ - று.)

(அக.) ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே
2 கார்ப்பெய லுருமின் முழங்கலா னாவே
3 யார்கொ லளியர் தாமே யூர்நாற்
4 செறியத் தொடுத்த கண்ணிக்
(ரு) கவிகை மள்ளன் கைப்பட் டோரே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

(இ - ள்.) படையினது ஆர்வாரம், எழுகடலுங்கூடி யொலிக்கும் ஒலியினும் பெரிது; அவனுடைய களிறு, கார்காலத்து மழையின்கண் இடியினும் முழங்குதலை அமையா; நாராற் பயிலத்தொடுக்கப்பட்ட ஆத்திக்கண்ணியையும் இடக்கவித்தகையினையுமுடைய வீரனது கையின்கண் பட்டோராகிய இரங்கத்தக்கார்தாம் யார்கொல். (எ - று.)

(அக)

(அஉ.) சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப்
2 பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
3 கட்டி னிணக்கு மிழிசினன் கையது
4 போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ
(ரு) வூர்கொள வந்த பொருநனொ
6 டார்புனை தெரிய னெடுந்தகை போரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

(இ - ள்.) ஊரின்கண் விழாத் தொடங்கிற்றாக, அவ்விழாவிற்கு உதவப்போகவும், தன்மனைவி பிள்ளைப்பெறுதலைப் பொருந்தினாளாக அவள் பெய்கோலிற்கு உதவப் போகவும்வேண்டிப் பெய்கின்ற மழையையுடைய ஞாயிறுவீழ்ந்தபொழுதின்கட் கட்டிலைப்பிணிக்கும் புலைமகன்கையதாகிய வாரைச்செலுத்தும் ஊசியினும் விரைந்தது, ஊரைக்கொள்ளவந்த வீரனோடு ஆத்தியாற்றொடுக்கப்பட்ட கண்ணியையுடைய பெருந்தகையது போர். (எ - று.)

நெடுந்தகைபோர், பட்டமாரி ஞான்றஞாயிற்றின்கட் சாறுதலைக்கொண்ட

ணப், பெண்ணீற்றுற்றென்ன இழிசினன்கையதாகிய ஊசியின் விரைந்தன்றெனக் கூட்டுக.

---

* இப்பாட்டினுள், 'உவமப்பொருளாகிய போழ்தூண்டூசிக்குப் பல அடை கூறி, அதனோடு உவமிக்கப்படும் போர்த்தொழிலினை யாதும் ஓரடையின்றி வாளாது கூறினும், உவமப்பொருளானே போர்த்தொழிற்குற்றதும் உணரக் கூறினும்; என்னை? உண்டாட்டும் கொடையும் உரனொடுநோக்கி மறுத்தலும் முதலாகிய உள்ளக்கருத்தினன் ஒருகண்ணத்தன்றே, பல்வேந்தரை ஒருங்குவேறற்கு விரைகின்றது போர்த்தொழிலென்பது தெளியப்பட்டமையின்' என்பர் நச்சினார்க்கினியர் [தொல். பொருள். உவமவியல் [illegible]]

*இறுதலைக்கொண்டென அதற்கு உதவப்போகவும், வெண்சுற்றதென அதற்கு உதவப்போகவுமென வேறுவேறுகொள்க; ஒன்றாகவுரைப்பாருமுளர். (அஉ)

(அங.) அடிபுனை தொடுகழன் மையணற் காளைக்கென்
2 றொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே;
3 *அடுதோண் முயங்க லவைநா ணுவலே;
4 என்போற் பெருவிதுப் புறுக வென்றும்
ரு ஒருபாற் படாஅ தாகி
6 இருபாற் பட்டவிம் மையலூரே.

திணை - கைக்கிளை; துறை - பழிச்சுதல்.
அவனைப் பெருங்கோழிநாய்கன் †மகள் நக்கண்ணையார் பாடியது.

(இ - ள்.) அடிக்கட்புனைந்த செறிந்த வீரக்கழலினையும், மைபோன்ற தாடியினையுமுடைய இளையோன்பொருட்டு வளை தவள என்னைக் கைவிடுதலான், யான், யாயை அஞ்சுவேன்; அவன்வலியையுடைய தோளைத் தழுவுதற்கு அவையின்கண் உள்ளாரை நாணுவேன்; என்னைப்போல மிக நடுக்கமுறுவதாக, எந்நாளும் யாயேயாதல், அவையேயாதல், ஒருகூற்றிற்படாதாகி யாயும் அவையுமாகி இருகூற்றிற் பட்ட இம்மயக்கத்தையுடைய ஊர். (எ - று.)

மையலூர் பெருவிதுப்புறுகவெனக் கூட்டுக.

யாயில்லையாயின், (வளைகழலுதற்கு) அஞ்சவேண்டா; அவையில்லையாயின், முயங்குதற்கு அஞ்சவேண்டாவென்பது கருத்தாகக்கொள்க.

'ஒருபாற் படாஅ தாகி யிருபாற் பட்டவிம் மையலூர்' என்பதற்கு அச்சமும் நாணுமுண்டாய்வருந்தும், என்கூற்றிலுமில்லாது, என்காதலறிந்து அவனோடு கூட்டுவியாத யாய்கூற்றிலுமில்லாது, இருவர்கூற்றிலுமின்றி மயங்குகின்றதெனினுமமையும். (அங)

(அச.) என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே!
2 யாமே, புறஞ்சிறை யிருந்தும் பொன்னன் னம்மே!
3 போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே
4 கல்லென் பேரூர் விழவுடை யாங்கண்
ரு ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்
6 குமணர் வெரூஉந் துறையன் னன்னே!

திணையும் துறையும் அவை.

நல்லவென்றது, இகழ்ச்சிக்குறிப்பு; ஆடென்றதூஉம் ஆடன்றென்றதூஉம் அவனைச் சுட்டியேகூறினமையின், இருதன்மொழியும் நல்லவென்றொழினுமமையும்.

(அகூ.) சிற்றி னற்றூண் பற்றி நின்மகன்
2 யாண்டுள் னோவென வினவுதி யென்மகன்
3 யாண்டுள் னாயினு மறியே னோரும்

4 புலிசேர்ந்து போகிய கல்லளை போல,
ஈன்ற வயிறோ இதுவே
6 தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.

திணை - வாகை ; துறை - ஏறாண்முல்லை.

காவற்பெண்டின் பாட்டு.

(இ - ள்.) சிறிய இல்லின்கண், நல்லதூணைப்பற்றிநின்று, நின்மகன் எவ்விடத் துளனோவென்று கேட்பை ; என்னுடையமகன் எவ்விடத்துளனாயினும் அறியேன்; புலிகிடந்துபோன கன்முழைபோல அவனைப்பெற்றவயிறோ இஃது ; அவன் செருக்களத்தின்கண்ணே தோன்றுவன் ; அவனைக்காணவேண்டின், ஆண்டுச்சென்றுகாண். — (எ - று.)

'ஈன்றவயிறோவிது' என்றகருத்து : புலிசேர்ந்துபோகிய அளைபோல அவனுக்கு என்னிடத்து உறவும் அத்தன்மைத்தென்பதாம். ஓருமென்பதூஉம், மாதோவென்பதூஉம் - அசைச்சொல். (௮௬)

(௮௭.) *களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
2 தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
3 எண்டேர் செய்யுந் தச்சன்
4 திங்கள் வலித்த காலன் னோனே.

திணை - தும்பை ; துறை - தானைமறம்.

† அதியமான்நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

(இ - ள்.) போர்க்களத்தின்கட்புகுதலைப் போற்றுமின், பகைவிர்; போரின் கண் மாறுபட்டு எங்களுள்வைத்தும், ஒருவீரனுளன் ; ஒருநாள் எட்டுத்தேரைச் செய்யுந்தச்சன் ஒருமாதங்கூடிக் கருதிச்செய்யப்பட்டதேர், தேர்க்காலையொப் பன். — (எ - று.)

போரெதிர்ந்து களம்புகலோம்புமின், எம்முளுமுளனெனக்கூட்டுக.

எம்முளுமென்ற உம்மை - சிறப்பும்மை. தேர்க்காலோடு உவமை - விரைவும் திண்மையுமாகக்கொள்க. (௮௭)

(௮௮.) யாவி ராயினுங் கூழை தார்கொண்
2 டியாம்பொருது மென்ற லோம்புமி னோங்குதிறல்
3 ஒளிறிலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்

4 கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்

---

* இச்செய்யுளை, வாகைத்திணையின் துறையாகிய அரும்பகைதாங்கும் ஆற்றற்கு உதாரணமாகக்காட்டினர் நச்சினார்க்கினியர் [தொல், பொரு, புறத்திணையியல், ௨௧ - ம் சூத்திரவுரை].

† அதிகமான் நெடுமானஞ்சியென்றும் பிரதிபேதமுண்டு.

88. 89. 90.

9) சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
௧0) தாதல் நின்னகத் தடக்கிச்
11 சாதல் நீங்க வெமக்கீத் தனையே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.
அவனை அவர் நெல்லிப்பழம்பெற்றுப் பாடியது.

(இ - ள்.) வென்றியுண்டான தப்பாத வாளையெடுத்துப் பகைவர் களத்தின் கட்பட வென்ற கழலவிடப்பட்ட வீரவளைபொருந்திய பெரிய கையினையுடைய மிக்க ஆரவாரத்தைச்செய்யும் மதுவினையுடைய அதியர்கோமான், மற்றுரைப் போரின்கட்கொல்லும் வீரச்செல்வத்தினையும் பொன்னாற்செய்யப்பட்ட மாலையையுமுடைய அஞ்சி, நீ பால்போலும்பிறை நுதல்போலப்பொலிந்த திருமுடியினையும் நீலமணிபோலும் கரிய திருமிடற்றினையுமுடைய ஒருவனைப்போல நிலைபெறுவாயாக; பெரும, நீ, பழைய நிலைமையையுடைய பெரியமலையிடத்து விடரின்கண் அரிய உச்சிக்கட்கொள்ளப்பட்ட சிறிய இலையினையுடைய நெல்லியின் இனிய பழத்தைப்பெறுதற்கு அரிதென்றுகருதாது, அதனாற்பெறும் பெரும்பேற்றினை எமக்குக்கூறாது நின்னுள்ளே அடக்கிச் சாதலொழிய எமக்கு அளித்தாயாதலால்.— எ - று.

'நீல மணிமிடற் றொருவன் போல' என்றகருத்து, சாதற்குக்காரணமாகிய நஞ்சுண்டும் நிலைபெற்றிருந்தாற்போல, நீயும் சாவாதிருத்தல் வேண்டுமென்பதாம்.

அதியர்கோமான், அஞ்சி, நெல்லித்தீங்கனி எமக்கு ஈத்தாயாதலால், பெரும, நீ நீலமணிமிடற்றொருவன்போல மன்னுகவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

'பிறைநுதற் பொலிந்த சென்னி' என்பதற்குப் பிறைதான் நுதலிடத்தே பொலிந்தசென்னியெனினுமமையும். (கக)

(கூஉ.) யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
2 பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
3 கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை;
4 யென்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்
(ரு) கடிமதி லரண்பல கடந்த
6 நெடுமா னஞ்சிநீ யருளன் மாறே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.) யாழோசைபோல இசையால் இன்பமுஞ்செய்யா; காலத்தோடும்

கூடியரா ?; பொருளும் அறியவாரா ;' ஆயினும், தந்தையாகனுக்கு அருளுந்தலைவந்தன,
பிள்ளைகளுடைய இளஞ்சொல் ;† என்னுடைய வாயின்கட்சொல்லும் அத்தன்மை

" * மால்வரைக், கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி, யமிழ்துவிளை, தீங்கனி யௌவைக், கீந்த, வுரவுச்சினங், கனலு, மொளிதிகழ், நெடுவேல் லரவக், கடற்றானை யதிகனும்" என்றார் சிறுபாணாற்றுப்படையிலும் [அடி - கூகூ - கoங].

† எம்கிலித்தோவேயென்றும் பாடம்.

தகையுந, தருப்பையிற் கிடத்தி வாளிற் போழ்ந்து, செருப்புகல் மன்னர் செல் வழிச் செல்கென, மூத்து விளிதல் இக்குடிப் பிறந்தோர்க்கு, நாப்புடை பெயராது நாணுத்தக வுடைத்தென.”



டாக நல்லபூசலிலேபட்ட மேம்பட்ட வீரக்கழலினையுடைய வேந்தர்செல்லுமுலக த்திலே செல்கவென்று வாளாற்போழ்ந்தடக்கும் இழிதகவைப் பிழைத்தார்கள், வலியை யுடைய தெளி ஒலிக்கும் வாயின்கண் விசித்தல்பொருந்திய மதத்தினையுடைய தலைமை பொருந்திய ஆனை போர்க்களத்தின்கண்ணேபடப் பொருதற்கரிய பூசலைக் கெடவெட்டி, பெரிய தகைமையையுடையாய், நீ சீரிய புண்பட்டபடியால்.—(எ-று.)

பெருந்தகாய், நீ அருஞ்சமம் ததையநூறி, விழுப்புண்பட்டவாற்றால், நின்னோ டெதிர்த்துவந்தோர்தாம், பீடின்மன்னர் விளிந்த, யாக்கைதழீஇ, நீள்கழல்மன்னர் செல்வழிச்செல்கென, வாள்போழ்ந்தடக்கலும், உய்ந்தனராதலின், இனி நின்னோ டெதிர்ப்பாரின்மையின், முரசுமுழங்கச்சென்று அமர்கடத்தல் யாவதெனக்கூட்டுக.

சென்றமர்கடத்தல், யாவது என்றதனானும், வாள்போழ்ந்தடக்கலுமுய்ந்தன ரென்றதனானும், வந்தோர்பட்டமை விளங்கும். இன்னும் இதற்கு நின்வாளாற் பட்டுத் துறக்கம்பெற்றதேயன்றி வாள்போழ்ந்து அடக்கலுமுய்ந்தனராகலின், அவ ர்க்குப் பிறர்மேற்சென்று அமர்கடத்தல் என்னபயனுடைத்தென்றுரைப்பினுமமை யும்; இனி, வந்தோராகிய மன்னர் நீ விழுப்புண்பட்டபடியாலே வாள்போழ்க் கடக்கலும் உய்ந்தார்; இனி நின்னோடெதிர்ப்பாரின்மையின் மேற்சென்று அமர் கடத்தல் யாவதெனக்கூட்டி அதற்கேற்ப உரைப்பாருமுளர். தார்தாங்கலுமென்ற உம்மை இழிவுசிறப்பு. வாள்போழ்க்கடக்கலுமென்பது, நினக்குத்தோற்றோரா ரென்னும் இழிதகவேயன்றித் தமர்வாள்போழ்ந்தடக்குமிழிவையும் உய்ந்தனரென

எச்சவும்மையாய்நின்றது. (கக)

(கூச.) ஊர்க்குறுமாக்கள் வெண்கோடு கழாஅலின்
2 நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
3 இனியை பெரும வெமக்கே மற்றதன்
4 துன்னருங் கடாஅம் போல
(ரு) இன்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.) ஊரின்கண் சிறுபிள்ளைகள் தனது வெள்ளிய கோட்டைக் கழுவுதல் காரணமாக நீரையுடைய துறைக்கட்படியும் பெரியகளிறு அவர்க்கு எவ்வாறு எளிதாய் இனிதாம்? அவ்வாறே எங்களுக்குப் பெரும, இனியை; மற்றதனுடைய அணுகுதற்கரிய மதம்பட்டநிலைமை எவ்வாறு இன்னாதாம்? அதுபோலப் பெரும, நின்பகைவர்க்கு இன்னாய்.—(எ - று.)

கழாஅலினென்பதற்குக் கழுவப்படுதலாலெனினுமமையும். (கூ)

(கூரு.) இவ்வே பீலி யணிந்து மாலை சூட்டிக்
2 கண்டிரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து
3 கடியுடை வியனக ரவ்வே யவ்வே
4 பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
(ரு) கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்
6 உண்டாயிற் பதங்கொடுத்

இல்லாயி னுடனுண்ணு மி
இல்லோ ரொக்கத் தலைவ
னண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.

திணை - பாடாண்டிணை; துறை - வாண்மங்கலம்.

அவன் தூதுவிடத், தொண்டைமானுழைச்சென்ற ஔவைக்கு, அவன்படைக் கலக்கொட்டில்காட்ட, அவர் பாடியது.

(இ - ள்.) இவைதாம், பீலி அணியப்பட்டு மாலைசூட்டப்பட்டு உடல்திரண்ட வலியகாம்பை அழகுபடச்செய்யப்பட்டு நெய்யிடப்பட்டுக் காவலையுடைய அகன்ற கோயிலிடத்தன; அவைதாம் பகைவரைக்குத்துதலாற் கங்கும் நுனியுமுரிந்து கொல்லனது பணிக்களரியாகிய குறிய கொட்டிலிடத்தனவாயின, எக்காலும்; செல்வமுண்டாயின் உணவுகொடுத்து இல்லையாயின் உள்ளதனைப் பலரோடுங்கூட உண்ணும் வறியோருடைய சுற்றத்திற்குத் தலைவனாகிய தலைமையையுடைய எம் வேந்தனுடைய கூரிய நுனியையுடைய வேல். (எ - று.)

பீலியணிந்தென்பது முதலாகிய வினையெச்சம் நான்கும் வியனகரவென்னும் குறிப்புவினையோடு முடிந்தன; இவற்றைச் செயவெனெச்சமாகத் திரிப்பினுமமையும். 'சிதைந்து ……… குற்றில' என்பது, பழித்ததுபோலப் புகழ்ந்து கூறப்பட்டது.

(இ - ள்.) போரைச்செய்தற்குப் படைபெயர்ந்து, உலாவி, விரும்பி, உறைகழி த்தவாள்கடாம், பகைத்தவரது, காவலையுடைய, அரணையழித்தலால், அவர்தலையின் கண்ணே உறக்குளித்துக் கதுவாய்ப்போய் வடிவிழந்தன; அவன் வேல்கள்தாம், குறும் பர்சேர்ந்த அரண்களைவென்று, அப்பகைவரது அரிய மதிலையுடைய நாட்டையழி த்தலாற் சிறையோடுபொருந்திய சுரியகாம்புடனே ஆணிகலங்கி நிலைகெட்டன; அவன்களிறுதாம், கணையமரத்திற் றடுக்கப்பட்ட கதவைப்பொருது அப்பகைவ ரது திரண்ட களிற்றையுடைய அரணையழித்தலாற் பரியபிணித்தலையுடையவாகிய கிம்புரிகள் கழன்றன; அவன்குதிரைதாம், பரந்துவந்து ஒக்கப்பொருதவீரரது பொன்னாற்செய்யப்பட்ட பசிய மாலையையுடையமார்பு உருவழிய ஓடுதலாற் போ ர்க்களத்தின்கட் பொருதுவருந்திய குருதியான் மறுப்பட்ட குளம்பையுடைய வாயின; அவன்றானும், நிலவுலகத்தைத் தன்னுள்ளேயடக்கும் கடல்போன்ற படையுடனே பொன்னாலியன்ற தும்பைக்கண்ணியையுடைய, கழல்வடிவாகவும் கிண்ணிவடிவாகவும்செய்து, செறிக்கப்பட்டு அம்புபடுதலால் துளைபட்ட பரிசை யையுடையன்; அவ்விடத்து அவனால் வெகுளப்பட்டோர் பிழைத்தல் எங்கேயுள் ளது; பெரியதாளினையும் ஒன்றோடொன்று தெற்றிக்கிடக்கின்ற கதிரினையுமுடைத் தாகிய நெல்லினையுடைய தலைமைபொருந்திய பழையவூர் நுங்கட்கு உரித்தாக வேண்டுவீராயிற் போய் அவனுக்குத் திறைகொடுத்தல்வேண்டும்; கொடீராயின், அதற்கு உடம்படுவானல்லன் வெல்லும்பூசலையுடையானென்று யான்சொல்லவும் கேளீராயின், நுமக்கு மெல்லிய தன்மையையும் கழன்பணியின் துணியால் கூறுபடுத்துச்சுருட்டப்பட்ட, இனமாகிய, சிலவாகிய, பனிச்சையையும் சிறிய வளை யையுமுடைய உரிமைமகளிரது தோளைப் பிரிதலுறுதல் வியப்பன்று; அதனையறி ந்து போர்செய்ம்மின். (எ - று.)

அறிந்தாடுமினென்றகருத்து: அறியிற் போர்செய்தல் அரிதென்பதாம். குறு ம்பு - சிற்றரண். கடற்றானையினையும், பொலந்தும்பையினையுமுடைய, அவன் றானுமென்க. (கூஎ)

(கூஅ.) முனைத்தெவ்வர் முரணவியப்
பொரக்குறுகிய நுதிமருப்பினின்
னினக்களிறு செலக்கண்டவர்
மதிற்கதவ மெழுச்செல்லவும்
ரு பிணனழுங்கக் களனுழக்கிச்
செலவசைஇய மறுக்குளம்பினின்
னினநன்மாச் செலக்கண்டவர்

புண்படு குருதி யம்பொடுக் கவும்
கரு) நீயே, ஐயவி புகைப்பவுந் தாங்கா தொய்யென
உறுமுறை மரபிற் புறநின் றுய்க்கும்
கூற்றத் தனையை யாகலிற் போற்றார்
இரங்க விளிவது கொல்லோ வரம்பணைந்
திறங்குகதி ரலமருங் கழனிப்
உ0) பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே.

திணை - வாகை; துறை - அரசவாகை; திணை - வஞ்சியும், துறை - கொற்ற வள்ளையுமாம்.

அவனை அவர் பாடியது.

(இ - ள்.) போர்முனைக்கட் பகைவரது மாறுபாடு அடங்கப் பொருதலால் தேய்ந்து குறைந்த நுனையுடைத்தாகிய கோட்டையுடைய நினது இனமாகிய யானை போகக்கண்ட பகைவர் தமது மதில்வாயிற் கதவங்களும் கணையமரங்களும் புதிதாக விடுதற்குப் பழையன போக்கவும், பட்டோரது பிணம் உருவழியப் போர்க்களத்தை உழக்கிச்செல்லுதலால் வருந்திய குருதிக்கறைபொருந்திய குளம்பையுடைய நினது இனமாகிய நல்லகுதிரைபோகக்கண்ட அப்பகைவர்தாம் கவைத்தவேல முள்ளாற் காட்டுவாயில்களை அடைப்பவும், நின்பகைவரது மார்பின்கண்ணெறிந்த வழி ஆண்டுத்தைத்தது மில்லாது உருவிப்போன உறையின்கட் செறித்தலில்லாத நின்வேலைக்கண்டபகைவர் தமது கிடுகைக் கிம்புடனே கைக்கீட்டுடைச்செறிக்கவும், வாள் வாய்க்கத்தைத்த வடுப்பரந்த நின்னுடைய மறத்தையுடையவீரரது வலியைக் கண்ட அப்பகைவர் புண்பட்ட குருதியையுடைய அம்பைத் தூணியகத்தடக்கிக் கொள்ளவும், தம்மான் வெண்சிறுகடுகைக் காவலாகப் புகைப்பவும், தரியாது விரைய வந்து பொருந்துதன்முறைமையையுடைய இயல்பிற் புறத்தேநின்று உயிரைக் கொடுபோதும் கூற்றத்தையொப்பை; ஆதலாற் பகைவரிரங்கக் கெடுவதுகொல்லோ! வரம்பைச்சேர்ந்த வினையும், நெற்கதிர்சுழலும் கழனியொடு மிக்க நீர்ப்பக்கத்தையுடைய அவரது அகன்ற இடத்தையுடைய நாடு. - (எ - று.)

செல்லவுமென்பதுமுதலாய செயவெனெச்சங்கள் கூற்றத்தனையையென்னும் வினைக்குறிப்போடுமுடிந்தன.

நீ கூற்றத்தனையையாதலிற் போற்றார்நாடு அவரிரங்க விளிவதுகொல்லெனக் கூட்டுக.

(கசo.) தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
(ரு) அரிசி வேண்டினே மாகத் தான்பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கட றுவளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களி றுநல்கி யோனே யன்னதோர்
தேற்றா வீகையு முளதுகொல்
கo) போற்றா ரம்ம பெரியோர் தங்கடனே.

திணை - அது; துறை - பரிசில்விடை.
அவனை †அவர் பாடியது.

(இ - ள்.) பெரிய நிலைமையையுடைய பலாமரத்தையுடைத்தாய நாஞ்சின் மலைக்குவேந்தன் அறிவுமெல்லியன், நிச்சயமாக; செவ்விய நாவையுடையபுலவீர், வளையணிந்த கையையுடைய விறலியர் மனைப்பக்கத்தின்கட்பறித்த இலைக்கு மேல் தூவுவதாக யாங்கள் சில அரிசிவேண்டினேமாக, தான் பரிசிலர்க்குதவும் வரிசை யறிதலால் எம்முடைமையைப்பார்த்தலேயன்றித் தனதுமேம்பாட்டையும் சீர்தூக்கிப் பெரிய காடுசூழ்ந்த மலைபோல்வதோர் பெரிய யானையையளித்தான்; ஆதலான், ஒருவற்கு ஒன்றனைக்கொடுக்குமிடத்து அப்பெற்றிப்பட்டதோர் தெளியாக்கொடையும் உளதோதான்? பெரியோர் தாங்கள்செய்யக்கடவமுறைமையைத் தெரிந்து பாதுகாத்துச் செய்யார்கொல். (எ - று.)

பிறவென்பது, அசைநிலை. கொல்லென்பது, பின்புங்கூட்டியுரைக்கப்பட்டது. (கசo)

(கசக.) பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
(ரு) யாரீ ரோவென வினவ லானாக்
காரெ னொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
இன்னே மாயினே மன்னே யென்னா

* "வானம் வாய்த்த வளமலைக் கவாஅற், கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, அருந்திற லணங்கி னாவியர் பெருமகன், பெருங்க னாடன் பேகனும்" என்பது சிறுபாணாற்றுப்படை [அடி அ௪ - அ௭].

— † உதிரத்தலாதென்றும் பாடம்.

143. Pegan. (3)



தும், எவ்விடத்தும் வரையாதமாரியினையுடைய மழைபோல மதமிக்க யானையினையுடைய கழல்புனைந்த காலையுடைய பேகன் கொடையிடத்துத் தான் அறியாமைப் படுதலல்லது பிறர்படைவந்து கலந்தபோரின் அப்படையிடத்துத் தான் அறியாமைப்படான்.—(எ - று.)

படைமடமென்றது, வீரரல்லாதார்மேலும், முதுகிட்டார்மேலும், புண்பட்டார்மேலும் மூத்தார் இளையார்மேலும் செல்லுதல். (கசஉ)

(கசங.) மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்
புனத்தினை யயிலு நாட சினப்போர்க் (௫)
கைவள் ளீகைக் கடுமான் பேக
யார்கொ லளியள் தானே நெருநற்
சுரனுழந்து வருந்திய வொக்கல் பசித்தென
குணில்பாய் முரசி னிரங்கு மருவி
நளியிருஞ் சிலம்பிற் சீறூ ராங்கண் (க0)
வாயிற் றோன்றி வாழ்த்தி நின்ற
நின்னும் நின்மலையும் பாட வின்னாது
இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையக நனைப்ப விம்மிக்
குழலினை வதுபோ லழுதனள் பெரிதே. (க௫)

திணை - பெருந்திணை; துறை - குறுங்கலி; [illegible]

அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக அவனைக் கபிலர் பாடியது.

(இ - ள்.) மலையை மழைவந்து சூழ்கவென்று மிக்க பலியைத் தூவி அம்மழை மிகப்பெய்தலான், அப்பெயல் அமைந்து முகில் மேலே போவதாக வேண்டுமென்று தெய்வத்தைப் போற்றிய குறமாக்கள் மழை இடத்து மாறிய உவகையராய் மிக்க சாரற்கட் புனத்தினையை உண்ணுங்காட், சினத்தினாற் செய்யும் போரையும் கைவன்மையாற் கொடுக்கும் கொடையினையுமுடைய விரைந்த குதிரையையுடைய பேக! அவ்வருளத்தக்காள் யாரோதான்? நெருநற்று சுரத்தின்கண்ணே கடந்து வருந்திய எனது சுற்றம் பசித்ததாக, கடிப்பு அறையப்பட்ட முரசுபோல ஒலிக்கப்பட்ட அருவியையுடைய பெரிய உயர்ந்த மலைக்கட் சிறிய ஊராகிய அவ்விடத்து வாயிற் கண்ணே வந்து தோன்றி வாழ்த்தி நின்று நின்னையும் நின்மலையையும் பாட, அப்பொழுது இன்னாதாகச் சொரியப்பட்ட கண்ணீரை ஒழித்தல் மாட்டாளாய் அக்கண்ணீர் முலையிடத்தை நனைப்பப் பொருமிக் குழல் இரங்கி ஒலிப்பதுபோல அழுதாள், மிகவும்.—(எ - று.)

மழைவேண்டுங்காலத்துப் பெய்வித்தற்கும் வேண்டாக்காலத்து ஒழித்தற்கும் பலிதூஉய்ப் பேணிய குறவராகிய மாக்களென்க.

143. 144: 6+ Pegan. (4)

* வன்பரணரென்றும் பிரதிபேதமுண்டு.

144. 145. Pegan. (5)



மென்று பலரும் சொல்லுவரென்றுகூறினன்; விளங்கிய புகழையுடையபேகன், ஒல்லெனமுழங்கும்தேருடனே முல்லைவேலியையுடைய நல்லூரின்கண். (எ - று.)

இளையையோவென ஓகாரமும், என்றெனவொருசொல்லும் வருவித்துரைக்கப்பட்டன.

நின்கானம் பாடினேமாக, இனைதலானாக, யாம் தற்றொழுதனம் வினவ, தன்கண்ணீர் துடைத்துப் பேகன் ஒருத்தியை நயந்து நல்லூரின்கண் என்றும் வருஉமென்பவென்றாள்; அவனை அருளாயாதல் கொடிதெனக்கூட்டிவினைமுடிவுசெய்க.

எம்போலொருத்தியென்றது, உவமைகருதாது வன்மையுரை தோன்றநின்றது. இனி, யாம் தற்றொழுதனம்வினவினேமாக, அவளாயத்தார் தம்விரலால் அவள் கண்ணீரைத்துடைத்து யாம் அவன்கிளைஞரேமல்லேம் இதுபுகுந்தவாறு யாம் கூறக்கேளென முன்புகூறிப் பின் பேகன் எம்போலொருத்தி நலன் நயந்து நல்லூரின்கட்சென்று வருமென்றுசொன்னார்கள்; இவ்வாறு இளையோளும் ஆயத்தாரும் உறும் துன்புறவுரைத்து அருளாயாதல் கொடிதெனவுரைப்பினுமமையும்.

எம்போலொருத்தியென்றது, எம்மைப்போலும் பொதுமகளொருத்தியென அவளை இழித்துக்கூறியவாறு.



(கசரு.) மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக!
பசித்தும் வாரேம் பாரமு மிலமே;
(ரு) களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறைநர் நடுங்கப் பண்ணி,
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென,
இஃதியாம் இரந்த பரிசில்; அஃதிருளின்
இனமணி நெடுந்தேர் ஏறி
(கo) இன்னாது உறைவி அரும்படர் களைமே!

திணையும் துறையும் அவை.
அவனை அவள்காரணமாக அவர் பாடியது.

(இ - ள்.) மெல்லிய தகைமையையுடைய கரிய மயில் குளிரால் நடுங்குமென்று அருள்செய்து படாம்கொடுத்த அழியாத நல்லபுகழினையுடைய மதம்பட்ட யானையையும் மனஞ்செருக்கிய குதிரையையுமுடைய பேக, யாம் பசித்தும்வருவேமல்லேம்; எம்மாற் பரிக்கப்படுஞ்சுற்றமுமுடையேமல்லேம்; களாப்பழம்போன்ற கரிய கோட்டையுடைய சிறிய யாழை இசையின்பத்தைவிரும்பியுறைவார் அவ்விசையின்பத்தால் தலையசைத்துக்கொண்டாடும்படி வாசித்து அறத்தைச்செய்வாயாக அருளைவிரும்புவோயென இது நின்பால் யாம் இரந்தபரிசில்; இற்றை இரவின்கண் இனமாகிய மணியையுடைய உயர்ந்ததேரையேறிப்போய்க் காண்டற்கு இன்னாதாக உறைகின்றவள் பொறுத்தற்கரிய நினைவாலுண்டாகியநோயைத் தீர்ப்பாயாக.—(எ - று.)

பேக, தேரேறி இன்னாதுறைவி அரும்படர் களை; யாழைப்பண்ணி யாம் இரந்தபரிசில் இதுவெனக்கூட்டுக.

தது, புதுமலர்களுலவென்று இயைத்துரைப்பாருமுளர். (கசஎ)

(கசஅ.) கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளிநின்
னசைவி னோன்றா ணசைவள னேத்தி
நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின் முட்டறுப்பப்
(௫) பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின் றெஞ் சிறுசெந் நாவே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை.
*கண்டீரக்கோப் †பெருநள்ளியை வன்பரணர் பாடியது.

(இ - ள்.) உச்சிக்கணின்றும் ஆலித்து இழிதரும் அருவியினையுடைய உயர்ந்த மலையையுடைய நள்ளி; நினது தளர்ச்சியில்லாத வலியமுயற்சியான் நச்சப்படும் செல்வத்தைவாழ்த்தி நாடோறும் நல்ல அணிகலத்தைக் களிற்றோடே கொண்டுவந்து நெற்கூடுவிளங்கும் அகலியநகரின்கணிருந்து சூழ்ந்திருந்தபரிசிலர்க்கு அளித்துவிடுதலாற் பிறர்க்கியும்பெருமையில்லாத அரசரைப்புகழும்புகழ்ச்சியைவிரு

* கண்டிரக்கோவென்றும் பிரதிபேதமுண்டு.
† பெருநற்கிள்ளியென்றும் பிரதிபேதமுண்டு.

தண்டா ரகல நோக்கின மலர்ந்தே.

திணை - அது; துறை - பாணாற்றுப்படை.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.) வணர்ந்த கோட்டையுடைய சிறியயாழை உலர்ந்த மருங்கிலே தழுவிக்கொண்டு அறிவோர்யார்தான் எனது துன்பத்தைத் தீர்க்கவென்று சொல்லும் பாண, யான்சொல்லுகின்றதனை இப்பொழுது கேட்பாயாக; நயத்தால், பாழூரில்



கண், *நெருஞ்சியினது பொன்னிறத்தையுடைய வாலியபூ எழுகின்ற ஞாயிற்றை எதிர்கொண்டாற்போல, வறுமையுற்ற யாழ்ப்புலவரது ஏற்கும் மண்டை, விளங்கிய புகழையுடைய கொண்பெருங்கானக்கிழானது குளிர்ந்த தாரையுடைய மார்பத்தை மலர்ந்துநோக்கின. — (எ - று.)

'ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாங்கு' என்புழி, இன் - சாரியை; அது, தோற்றம்வேண்டாத்தொகுதிக்கண்வந்தது. அன்றி, ஐந்தாம் விகாரத்தால் தொக்கதெனினுமமையும். நயத்திற்கிளக்கும்பாணவென இயையும்; நயத்தின் அகலநோக்கினவென இயைப்பினுமமையும். மண்டை அகலநோக்கி மலர்ந்தவென்ற கருத்து: கொடுக்கும்பொருள் மார்பின்வலியான் உளதாமாகலின், அகலநோக்கினவென்றதாகக்கொள்க. (கருரு)

CLVII.
ஏறைக் கோன்.

மழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை
யெற்படு பொழுதி னினந்தலை மயங்கிக்
௧௦ கட்சி காணாக் கடமா னல்லேறு
மடமா னாகுபிணைப் பயிரழைப்பின்
விடர்முழை யிரும்புலிப் புகர்ப்போத் தோர்க்கும்
பெருங்க னாடனெம் மேறைக்குத் தகுமே.

திணையும் துறையும் அவை.

ஏறைக்கோனைக் குறமகள் இளவெயினி பாடியது.

(இ - ள்.) தனக்குச்சிறந்தோர் தன்னைப்பிழைப்பின் அதுபொறுத்தலும்; பிறருடையவறுமைக்குத் தான் நாணுதலும்; படைபிடித்துப் பிறர் பழிக்கப்படாத வலியையுடையனாதலும்; அ[illegible]டைத்தாகிய அவ்வக்களத்தின்கண் மேம்பட்டிருத்தலும்; நம்மால் மதிக்கப்படுந்தலைவர்க்குத் தகுவனவல்ல; எம்முடையதலைவன், வில்லைப் பூணாகவலித்தலான், அகன்றமார்பினையும் கொல்லும்வேலினையும் காந்திட்பூவாற்செய்த கண்ணியினையுமுடைய குறவர்க்குத்தலைமகன்; இயங்குகின்றமுகிலைத் தனது உயரத்தால் தகைக்கும் பயன்பொருந்தியமலையினது உச்சிக்கண் ஞாயிறுபடுகின்றகாலத்தில், இனத்தினின்றும் தலைமயங்கித் தான்சேரும் சேக்கையைக் காணாத காட்டின்கண், மானினது நல்லஏறு மடப்பத்தினையுடைய மானாகிய இளம்பிணையைப் பயிரான் அழைப்பின் அவ்வோசையை விடராகிய முழையின்கட் கிடக்கின்ற பெரும்புலியாகிய புகர்நிறத்தினையுடைய ஏறு செவிதாழ்த்துக்கேட்கும் பெரிய மலைநாட்டையுடைய எம்முடைய ஏறைக்கோனுக்குப்பொருந்தும். (எ - று.)

கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங்
கெழுவர் மாய்ந்த பின்றை யழிவரப்
பாடி வருநரும் பிறருங் கூடி
யிரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவண்
உ0 உள்ளி வந்தனென் யானே விசும்புறக்
கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி
யாசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்
றுய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரு
உரு மதிரா யாணர் முதிரத்துக் கிழவ !
விவண் விளங்கு சிறப்பி னியறேர்க் குமண !
விசைமேந் தோன்றிய வண்மையொடு
பகைமேம் படுகநீ யேந்திய வேலே.

திணை - அது ; துறை - வாழ்த்தியல் ; பரிசில்கடாநிலையுமாம்.
குமணனைப் பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள். முரசு கடிப்பு அறையவும் வெள்ளியசங்கு முழங்கவும் வேந்தருடனேபொருத தலைமையையுடைய நெடியமலைக்கண் ஒலிக்கும் வெளிய அருவி கல்லை உருட்டிப்போதும் பறம்பிற்குவேந்தனாகிய பாரியும், உயர்ந்த உச்சியையுடைய கொல்லிமலையையாண்ட வலியவில்லையுடைய ஓரியும், காரியென்னும் பெயரையுடைய குதிரையைச்செலுத்திப் பெரியபூசலைவென்ற மாரிபோலும்வண்மையையும் மிக்கபோரினையுமுடைய *மலையனும், செலுத்தப்படாது உயர்ந்த குதிரையென்னுமலையையும் கூரியவேலையும் கூவிளங்கண்ணியையும் வளைந்த ஆரத்தையுமுடைய எழினி அதியமானும், மிகக்குளிர்ந்த மலையின்கண் இருள்செறிந்த பெரிய முழையினையும் மலைத்தற்கரியவலியினையுமுடைய தெய்வங்காக்கும் உயர்ந்தசிகரங்களையுடைய பெரியமலைநாடனாகிய பேகனும், திருந்தியசொல்லையுடைய மோசியென்னும்புலவனாற்பாடப்பட்ட ஆயும்; ஆசைப்பட்டுத் தன்னை நினைந்துவருவாருடையவறுமை மிகவுந்தீரத் தவிராதுகொடுக்கும் கூறுபாடமைந்த வண்மையினையுடைய பகைவரைத்துரத்திய நள்ளியும், எனச்சொல்லப்பட்ட எழுவரும் இறந்த

* காரியென்பவன், இவனே; இவனை மலையமான்றிருமுடிக்காரியென்றுங் கூறுவர்.

† இச்செய்யுளிற்போலவே "வானம் வாய்த்த வளமலைக் கவாஅற், கானமஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, வருந்திற லணங்கி னாவியர் பெருமகன், பெருங்க னாடன் பேகனுஞ் சுரும்புண, நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச், சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய, பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான் பாரியுங் கறங்குமணி, வாலுளைப் புரவியொடு வையக மருள, வீர நன்மொழி யிரவலர்க் கீந்த, வழறிகழ்ந் திமைக்கு மஞ்சுவரு நெடுவேற், கழறொடித் தடக்கைக் காரியு நிழறிகழ்; நீல நாக நல்கிய கலிங்க, மாலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த, சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோ, ளார்வ நன்மொழி யாயு மால்வரைக், கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி, யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த, னரவக்கினர்

பொழிலும் வண்டிறைஞ்சு நெடுங்கோட்டு, நளிமலை நாடன் நள்ளியு நளிசினை, நறும் போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக், குறும்பொறை நன்னாட்டு கோடியர்க் கீந்த, காரிக் குதிரைக் காரியொடு மலைந்த, ஓரிக் குதிரை யோரியு மெனவாங், கெழு சமங் கடந்த வெழுவுறழ் திணிதோ ளெழுவர் பூண்ட வீகைச் செந்நுகம், விரிகடல் வேலி வியலகம் விளங்க, வொருதான் றாங்கிய வுரனுடை நோன்றாள் ...... ...... ஓவியர் பெருமகன்" என்று வள்ளல் எழுவரையும் சிறுபாணாற்றுப்படையிலுங்கூறி யிருத்தல்காண்க [அடி. அசு - கஉஉ].

ஐவனம் வித்தி மையுறக் கவினி
ஈனல் செல்லா வேனற் கிழுமெனக்
கருவி வானந் தலைஇ யாங்கும்
௨0 ஈத்த நின்புக ழேத்தித் தொக்கவென்
பசியின் திரங்கிய வொக்கலு முவப்ப
வுயர்ந்தேந்து மருப்பிற் கொல்களிறு பெறினும்
தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலே னுவந்துநீ
யின்புற விடுதி யாயிற் சிறிது
௨௫ குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண
வதற்பட வருளல் வேண்டுவல் விறற்புகழ்
வசையில் விழுத்திணைப் பிறந்த
விசைமேந் தோன்றனிற் பாடிய யானே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.) தனக்குச்சென்ற ஆண்டுகள் பல உண்டாதலின், இன்னும்போ கின்றதில்லை எனதுயிரென்று சொல்லிக்கொண்டு வாழுநாளோடு பல்லாகவெறுத் துத்தான்பிடித்தகண்டே காலாகக்கொண்டு ஒன்றற்கொன்று அணுகப் பலஅடி யிட்டுநடந்து நூலைவிரித்தாற்போலும் மயிரையுடையவளாய்க் கண்மறைந்து முற் றத்திடத்துப் புறப்படமாட்டாத மூப்பையுடைய தாயும், பசப்புற்றமேனியுடனே பிணிவுவருத்த வருந்தி மருங்கிலே எடுத்த பலசிறுபிள்ளைகள் பிசைந்துமெல்லுத லால் உலர்ந்தமுலையிணையுடையளாய் மிகவும்வருந்திக் குப்பையின்கண் படுமுத லாகவெழுந்த கீரையின்கண் முன்புகொய்யப்பட்ட கண்ணிலேகிளைத்த முதிராத இளையதளிரைப்பறித்துக்கொண்டு உப்பின்றியே நீரை உலையாகக்கொண்டு ஏற்றிக் காய்ச்சி மோரின்றி அவிழாகியவுணவைமறந்து பசிய இலையைத்தின்று மாசொடு கூடித் துணிபட்ட உடையினளாய் அறக்கடவுளைப்பழித்து என்னுடைய என்னை விரும்பிவேறாமென்றுசொல்லப்பட்ட இருவருடையநெஞ்சமும் காதலிப்ப, வேடர் சுடப்பட்டுக் கரிந்தபுனத்தை மயங்கவுழுத அகன்ற இடத்தையுடையகொல்லைக்கண் ஐவனநெல்லோடுவித்தி இருட்சியுற அழகுபெற்றுக் கோடைமிகுதலின் ஈன்றலைப் பொருந்தாத தினைக்கு இழுமெனும் அனுகரணவொலியுடனே மின்னும் இடியு முதலாகிய தொகுதியையுடையமழை துளியைச்சொரிந்தாற்போலத் தந்த நினது புகழைவாழ்த்திப் பசியினால்வருத்தமுற்ற ஈண்டிய எனது சுற்றமுமகிழ மேம் பட்டு ஏந்தியகோட்டையுடைய கொல்யானையைப்பெறினும் முகமாறித்தரும்பரி

இன்புறவிடுதியாயிற், குன்றியுங்கொள்வேன் ; அதற்பட அருளல்வேண்டுவலெனக் கூட்டி. வினைமுடிவுசெய்க.

'வாழு நாளோடு யாண்டுபல வுண்மையின்' என்பதற்கு, இன்பநுகர்ச்சிகழிந்த இளமைகளுடனே மூப்புவந்து துன்பமுற்ற யாண்டுபல்வுண்மையினெனினு மமையும். குன்றியுமென்பதற்குக் குறைந்துமென்று உரைப்பாருமுளர். ஆங்கு மென்னும் உம்மை இசைநிறை. (கருகூ)

---

(கசுo.) உருகெழு ஞாயிற் றொண்கதிர் மிசைந்த
முளிபுற் கானங் குழைப்பக் கல்லென
அதிர்குர லேறொடு துளிசொரிந் தாங்குப்
பசித்தின்று திறங்கிய கசிவுடை யாக்கை
(ரு) அவிழ்புகு வறியா தாகலின் வாடிய
நெறிகொள் வரிக்குடர் கிளிப்பத் தண்ணெனக்
குய்க்கொள் கொழுந்துவை நெய்யுடை யடிசில்
மதிசேர் நாண்மீன் போல நவின்ற
சிறுபொ னன்கலஞ் சுற்ற விரீஇக்
கo) கேடின் றாகப் பாடுநர்க் கடும்பென
அரிதுபெறு பொலங்கல மெளிதினின் வீசி
நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்
மட்டார் மறுகின் முதிரத் தோனே
செல்குவை யாயி னல்குவன் பெரிதெனப்
கரு) பல்புகழ் நுவலுநர் கூற வல்விரைந்
துள்ளந் துரப்ப வந்தனெ னெள்ளுற்
றில்லுணாத் துறத்தலி னில்மறந் துறையும்
புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண்
பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்
உo) கூழுஞ் சோறுங் கடைஇ யூழின்
னுள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு
மறப்புலி யுரைத்து மதியங் காட்டியு
நொந்தன ளாகி நுந்தையை யுள்ளிப்
பொடிந்தநின் செவ்வி காட்டெனப் பலவும்
உரு) வினவ லானா ளாகி நனவின்
னல்ல லுழப்போண் மல்லல் சிறப்பச்

27 செல்லாச் | செல்வ | மிகுத்தனை | வல்லே |
— [illegible] விடுத்தல் | வேண்டுவல் | அத்தை | படுதிரை
— [illegible] நீர்சூழ் | நிலவரை | உயர நின் |
— ௩௰) சீர்கெழு | விழுப்புகழ் | ஏத்துகம் | பலவே

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது. பெருஞ்சித்திரனார்

ஊட்டியென ஒருசொல் தரப்பட்டது. 'நட்டோர்நட்ட' என்பதற்கு நட்டோரானாட்டியவென்னினுமமையும். 'செல்லாச்செல்வமீத்தனை' என்பதூஉம், 'நிலவஞ்ஞாயுணர' என்பதூஉம் பாடம். (கசு0)

---

(கசுக.) நீண்டொளி யழுவங் குறைபட முகந்துகொண்
2 டீண்டுசெலற் கொண்மூ வேண்டுவயிற் குழீஇப்
3 பெருமலை யன்ன தோன்றல் சூன்முதிர்
4 புருமுரறு கருவியொடு பெயல்கடன் இறுத்து
௫ வளமழை மாறிய என்றூழ்க் காலை
6 மன்பதை யெல்லாஞ் சென்றுணக் கங்கைக்
7 கரைபொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்
8 கெமக்கும் பிறர்க்குஞ் செம்மலை யாகலின்
9 அன்பிலி ரடவர் கொன்றாறு கவரச்

107

(இ - ள்.) இரப்போர்க்கு ஈத்த பாதுகாப்பாய் நீயுமல்லை; புரப்போர் இரப்போர்க்கு இல்லையுமல்லர்; இனி இரப்போருண்டாதலையும் காண்பாயாக; இரப்போர்க்கு ஈவோருண்டாதலையும் காண்பாயாக; நின்னுடைய ஊரின்கட் காவலையுடையமரம்வருந்தக் கொடுவந்து யாம்கட்டிய உயர்ந்த நல்ல இலக்கணமுடைய யானை எமது பரிசில்; விரைந்தசெலவினையுடைய குதிரையையுடைய தலைவனே! இனி யான்போவல். (எ - று.)

யான்போவலென்றகருத்து: முன்னின்றுகொடுப்பக், கொள்ளாதமிகுதிதோன்றநின்றது. இரவலருண்மையுங்காணினியென்றகருத்து: இரப்போர்க்குப் பெருந்தன்மையுளதாதல், என்னளவிலேகாணென்பதாம். 'யாம்பிணித்த' என்னும் பன்மை, பெருமிதந்தோன்றநின்றது. * "நடைவயிற் றோன்று மிருவகை விடையும்" என்பதனால், இது பெருதுபெயர்த்தபரிசில்விடை. (கசுஉ)

(கசுஙு.) நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுதலோர்க்குங்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
னெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கு
மின்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயு
மெல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமண னல்கிய வளனே.

திணை - அது; துறை - பரிசிற்பாற்பட்டது.

பெருஞ்சித்திரனார் குமணனைப்பாடிப் பரிசில்கொணர்ந்து மனையோட்குச் சொல்லியது.

(இ - ள்.) நின்னைக்காதலித்துறையும் நின் சார்வாயமகளிர்க்கும் நீ அன்புசெய்தொழுகப்பட்டமகளிர்க்கும் பலகுணங்களும் மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய நினதுசுற்றத்து மூத்தமகளிர்க்கும் நமதுசுற்றத்தினது மிக்கபசிநீங்க. நினக்கு நெடுநாட்படக் குறித்த எதிர்ப்பை தந்தோர்க்கும் மற்றும் இன்னதன்மையாரென்றுகருதாதுஎன்னொடுகூடி, உசாவுதலுஞ்செய்யாது சுதைப்படக், குடிவாழ்க்கைவாழக் கடவேமென்றுகருதாது, நீயும் யாவர்க்கும் வழங்குவாயாக, என்து மனைக்குரியோயே! பலாப்பழமுதலாயினதூங்கும் முதிரமென்னும்மலைக்குத்தலைவனாகிய திருந்தியவேலையுடையகுமணன் நல்கியசெல்வத்தை. (எ - று.)

(கசுச.) ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி உழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
(ரு) சுவைத்தொறு அழூஉந்தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்
(க0) தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே.

திணை - அது; துறை - பரிசிற்கடாநிலை.
தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணனைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியது.

(இ - ள்.) அடுதலை மிகவும் மறந்த புடையோங்கிய அடுப்பின்கட் காளாம்பி பூப்ப உடம்பு மெலியும் பசியால் வருந்திப் பாலின்மையால் தோலாந்தன்மையுடனே திரங்கித் துளை தூர்ந்த பொல்லாத வறிய முலையை வறிதே சுவைக்குந்தோறும் அழுகின்ற தனது பிள்ளையது முகத்தைப் பார்த்து நீரால் நிறைந்த ஈரிய இமையையுடைய குளிர்ந்த கண்ணையுடைய என் மனைவியது வருத்தத்தைப் பார்த்து இந்த வருத்தந் தீர்த்தற்குரியாய் நீயென நினைந்து நின்பால் வந்தேன்; நல்ல போரையுடைய குமண, எனது வறுமைநிலையை நீ அறிந்தாயாயின், இவ்வாறு வறுமையுற்ற என் நிலைமைக்கண் வலிந்தாயினும் பரிசில் கொள்ளாது விடேன்; வலமாக அடுக்கப்பட்ட பண்ணமைந்த நரம்பினையுடைய தோலாற் போர்க்கப்பட்ட நல்ல யாழையும் மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையுமுடைய கூத்தரது மிடியைக் கெடுக்கும் குடியின்கட் பிறந்தோயாதலால். (எ - று.)

அடுதலை மிகவும் மறத்தலால் தேய்வின்றி உயர்ந்த அடுப்பென்றுமாம்.

குமண, நீ இன்மைதீர்க்குங் குடிப்பிறந்தோயாதலால், இந்நிலைத் தொடுத்துங் கொள்ளாது அமையலெனக் கூட்டுக. (கசுச)

கசுரு. மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வர்
இன்மையி னிரப்போர்க் கீஇயாமையின்

'கோயிலராகுகநின்புதல்வர்' என்பதூஉம், 'சிறக்கநின்னுள்' என்பதூஉம் குறிப்புமொழி; அன்றி, பரிசில்மறுத்தலான் இவன்புதல்வர்க்கும் இவனுக்கும் தீங்கு வருமென்றஞ்சி, கோயிலராகவெனவும், சிறக்கநின்னுளெனவும் கூறினாராக உரைப்பினுமமையும். நல்குரவென்பது, கல்லெனக் குன்றாநின்றது. 'கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை' என்பதற்குக், கல்லாற்செய்தாற்போன்று பயன் கொள்ளாத யாக்கையையுடைய என்னுடைய நல்கூர்ந்தவளிமறையெனவும், கல்லைத் துளைத்தாற்போன்ற காற்றடைமாத்திரையாகச்செய்யப்பட்ட நல்கூர்ந்த என்மனை யெனவுமுரைப்பாருமுளர். (கசுசு)

(கசுஎ.) வளிநடந் தன்ன வாவுச்செல லியவொடு
கொடிநுடங்கு மிஞிலிசைத் தேரின ராகிக்
கடல்கண் டன்ன வொண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்குங் களிற்றின ராயினும்
(ரு) உருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றிய ராயினும்
மண்கெழு தானை யொண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே
யெம்மால் வியக்கப் படூஉ மோரே
கo) யிடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉஞ்
சீறூர் மன்ன ராயினு மெம்வயிற்
பாடறிந் தொழுகும் பண்பி னோரே
கரு) மிகப்பே ரெவ்வ முறினு மெனைத்தும்
முணர்ச்சி யில்லோ ருடைமை யுள்ளேம்
நல்லறி வுடையோர் நல்குர
வுள்ளுதும் பெருமயா முவந்துநனி பெரிதே.

திணையும் துறையுமவை.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன், பரிசில்நீட்டித்தானைக், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியது.

(இ - ள்.) காற்றியங்கினாற்போலும் தாவுதலுடைத்தாகிய கதியையுடைய குதிரையோடு கொடி நுடங்கும் உச்சியையுடைய தேரினையுடையரெனவும், கடலைக் கண்டாற்போலும் ஒள்ளியபடைக்கலத்தையுடைய சேனையுடனே மலையோடுமாறுபட்டுப் பொருங் களிற்றினையுடையரெனவும் இடிமுழங்கினாற்போலும் அஞ்சத்

(ரு) புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் லாடவர்



ருடைமை யாகு மவருடைமை;
யின்மை யாகு மவரின் மையே.

திணையும் துறையும் அவை.
பெரும்பதுமனுர் பாட்டு.

(இ - ள்.) தெய்வமுறையும் ஆலமரத்தினது பெரியகொம்பின்கட் பலபழத்தை நென்னலுமுண்டேமென்றுவாய்ப், பின்னும் அவ்விடத்துப்போதலமையா ஒலி பொருந்தின புள்ளினம்; அத்தன்மையினையுடையார் இரப்போர்; அவரைக் காத்தற்கு எதிர்கொள்ளும் மிக்கசெய்கையையுடைய ஆண்மக்களது செல்வமாகும், அவ்விரப்போர்செல்வம்; அவ்வாண்மக்களுடைய வறுமையாகும், அவ்விரப்போருடைய வறுமை.—(எ - று.)

வாழியும், ஓவும், அசைநிலை. (க௯௯)

(உ00.) பனிவரை நிவந்த பாசிலைப் பலவின்
கனிகவர்ந் துண்ட கருவிரற் கடுவன்
செம்முக மந்தியொடு சிறந்துசேண் விளங்கி
மழைமிசை யறியா மால்வரை யடுக்கத்துக்
(ரு) கழைமிசைத் தூங்குங் கல்லக வெற்ப!
நிணந்தின்று செருக்கிய நெருப்புத்தலை நெடுவேற்
களங்கொண்டு கனலுங் கடுங்கண் யானை
விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக் கோவே
இவரே, பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
க0) நாத்தழும் பிருப்பப் பாடா தாயினுங்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்.
யானே, பரிசிலன் மன்னு மந்தணன்; நீயே
வரிசையில் வணக்கும் வாண்மேம் படுநன்

நிலையுமுடைய விச்சிக்கோவே! இவர்கள்தாம், பூவைத் தனது தலையின்கண் மயிராக அலங்கரித்தாற்போலும் கொடிமுல்லைதான் மீத்தழும்பேறப், பாடாதாயினும் ஒலிக்குமணியையுடைய நெடியதேரைக் கொள்கவென்றுசொல்லிக் கொடுத்த பரந்து மேம்பட்ட தலைமையினையுடைய பாரிக்குமகளிர்; யான் பரிசிலன்; அதுவன்றியும் நிலைபெற்ற அந்தணன்; நீ, பகைவரைப்போர்செய்யுமுறைமையிற்பொருது தாழ்விக்கும் வரிசையின்மேம்படுபவன்; ஆதலால், நினக்கு யான்தரக்கொள்வாயாக; சினத்தலையுடையபோரானே பகைவேந்தரை மிகவடக்கும், மடக்கப்படாதமிக்க விளைதலையுடைய நாட்டையுடையோய்.—(எ - று.)

மடக்குதல் - போகமொருக்குதல்.

பலவின்கனிகவர்ந்துண்டகடுவன், மூங்கிலொடுசிறந்து, சேண்விளங்கிக் கழைமிசைத்துஞ்சுமென்றதனால், நீயும் இவளைவரைந்துகொண்டு, இன்புற்று வாழ்தல் வேண்டுமென்பது தோற்றிநின்றது.

'யானே பரிசிலன்' என்பதனால் நினக்கு என்குறை முடிக்கவேண்டுமென்பதூஉம், அந்தணனென்றதனால் யான், தருதற்குரியேனென்பதூஉங்கொள்ளப்படும்.

உலகத்துமகட்பேசிவிடக் கொடுத்தலையன்றித் தாமே, இவரைக் கொள்வாயாக வென்று இரக்கக்கூறினமையின், இது பரிசிற்றுறையாயிற்று. (௨00)

(௨0௧.) இவர்யா ரென்குவை யாயி னிவரே
ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
(௫) நெடுமாப் பாரி மகளிர் யானே,
தந்தை தோழ னிவரென் மகளிர்; —
அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே! —
நீயே, வடபான் முனிவன் றடவினுட் டோன்றிச்
செம்பு புனைந் தியற்றிய சேணெடும் புரிசை
(௧0) உவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிரு ளேவேள் விறற்போ ரண்ணல்
தாரணி யானைச் சேட்டிருங் கோவே!
ஆண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
(௧௫) ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்
யான்தர விவரைக் கொண்மதி வான்கவித்
திருங்கட லுடுத்தவிவ் வையகத் தருந்திறல்

எவ்வி தொல்குடிப் படீஇயர் மற்றிவர்
கரு கைவண் பாரி மகளி ரென்றவென்
தேற்றாப் புன்சொ னோற்றிசிற் பெரும
விடுத்தனென் வெலீஇயர்நின் வேலே யடுக்கத்
தரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட் டொள்வீ தாய துறுகல்
உ௦ இரும்புலி வரிப்புறங் கடுக்கும்
பெருங்கல் வைப்பி னாடுகிழ வோயே.

திணையும் துறையும் அவை.
இருங்கோவேள் பாரிமகளிரைக் கொள்ளானாகக் கபிலர் பாடியது.

(இ - ள்.) வெட்சிலைமையுடைய காட்டின்கண்ணுள்ள, வேட்டுவரலைப்பத் தனக்குப் புகலிடங்காணாது, கடமாவினது நல்ல ஏறு வள்ளிச்சாரன்மணி மேலே விளம்பவும் சிதறியபொன் விளங்கவும் விளையவேரம் நெடியமலைப்பக்கத்து வெற்றிநிலை பெற்ற சிறந்த புகழ்பொருந்திச் சிற்றரையம் பேரரையமென இருகூற்றுப்பெயர் பெற்ற உட்குப்பொருந்திய பழைய ஊரின்கண் பல்கோடியாக அடுக்கப்பட்ட பொன்னை நுங்களுக்கு உதவிய கேடியரில்லையுடைய அரையத்தினது கேட்டையும் இனிக் கேட்பாயாக; அதுகெடுதற்குக்காரணம்: நினது தாளால் தரப்பட்ட பொருளையன்றி, நுந்தையுடைய உரிமையை நிறையப்பெற்ற இழைத்தகண்ணியை யுடைய புலிகடிமாலே! நும்மையொக்கும் அறிவினையுடைய நுங்குடியுள்ளொருவன், புகழ்ந்தசெய்யுளையுடைய கழாஅத்தலையாரென்னும் புலவரை அவமதித்ததனாலுண் டான பயன்; இயற்றப்பட்டதேரையுடைய தலைவ! இவர் எவ்வியுடைய பழைய குடியிலேபடுவோர்களாக; பின்னை இவர் கைவண்மையையுடைய பாரிமகளிரென்று சொல்லிய எனது தெளியாதபுன்சொல்லைப் பொறுப்பாயாக; பெருமானே! யான் நின்னை விடைகொண்டேன்; நின்வேல் வெல்வதாக; அரைமலையில் முகையற மலர்ந்த கரியகாலையுடைய வேங்கையினது சிறிய புறவிதழையுடைய ஒள்ளியபூப் பரந்த பொற்றறைக்கல் பெரும்புலியினது வரியையுடையபுறத்தையொக்கும் பெரிய மலையிடத்தூர்களையுடைய காட்டையுடையோய்.—(எ - று.)

புலிகடிமால், அண்ணல், காடுகிழவோய், அரையத்துக்கேடும் கேள், இனி; அது கழாத்தலையையிகழ்ந்ததன்பயன். இப்பொழுது எவ்விதொல்குடிப்படீஇயர், இவர் பாரிமகளிரென்ற புன்சொல்லைப்பொறுப்பாயாக; பெருமானே, நின்னை

விடுத்தேன்; நின்வேல் வெல்வதாகவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

ஒலியற்கண்ணி - தளிர்மாலையெனினுமமையும். நீடுவிலையளாயத்தாக்கேடும் கழாத்தலையையிகழ்ந்தனன்பயனென்ற உம்மையான், இவ்விகழ்ச்சியும் உனக்குக் கேடுதருமென்பதாயிற்று. அது கெடுதற்குக்காரணம், கழாத்தலையை நுமருள் ஒருவன் இகழ்ந்ததனால், அவன்வாக்குத்தப்பாதாகலின், அவனைசபிக்கப்பாடினு னென்றுசொல்லுவர்; அதுவேயென்பதாம். 'வெல்லீஇயர்நின்வேல்' என்றது, குறிப்புமொழி. 'நுந்தைதாயம்நிறைவுறவெய்திய' என்பதூஉம், 'நும்பேரறி வின்' என்பதூஉம் - இகழ்ச்சிதோன்றநின்றன. வேங்கைவீதாயதுறுகல் இரும் புலிவரிப்புறங்கடுக்குமென்றகருத்து: ஏதஞ்செய்யாததூஉம் ஏதஞ்செய்வதுபோலக்

பனவற்றை வினையெச்சமாக்கி, மாறினும் கரப்பினுமென்னும் வினையோடு முடிப்பினுமமையும். (உ0ங)

(உ0சு.) ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று;
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று;
(ரு) தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா ராகுப நீர்வேட் டோரே;
ஆவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
சேறொடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கி னதர்பல வாகும்;
(க0) புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியல ரதனாற்
புலவேன் வாழிய ரோரி விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே.

திணையும் துறையும் அவை.
வல்வில் ஓரியைக் கழைதின் யானையார் பாடியது.

(இ - ள்.) இழிந்தோன் கூற்றாகிய ஈயெனச்சொல்லி யிரத்தல் இழிந்தது; அவ்வீயென்றதனெதிர் ஈயேனென்றுசொல்லி மறுத்தல் அவ்விரத்தலினு மிழிந்தது; ஒருவன் இரப்பதன்முன்னே அவன்குறிப்பை முகத்தாலுணர்ந்து இதனைக்கொள்வாயாகவென்றுசொல்லித் தானிரந்துகொடுத்தல் ஒருவற்கு உயர்ந்தது; அதனை அவன் அவ்வாறுகொடுப்ப அதனெதிர் கொள்ளேனென்றுசொல்லி மறுத்தல் அக்கொடையினுமுயர்ந்தது; தெளிந்தநீர்ப்பரப்பின் ஒலிக்கும்திரையையுடைய பெரியகடல் நீரையுண்ணார், தண்ணீரைவிரும்பினோர்; ஆவும் மாவுஞ்சென்று நீரை உண்ணக் கலங்கிச் சேற்றொடுகூடிய, சிறுமையையுடைத்தேயாயினும் உண்ணுநீரையுடைய தாழ்ந்தவிடத்தைச், செல்லும்வழி பலவாகும்; தாம்புறப்பட்டுச்செல்லப்பட்டவழியிடத்து அப்பொழுதுசெய்யும் புள்நிமித்தத்தையும் புறப்பட்டமுகூர்த்தத்தையும் பழித்தலல்லது தாம்பரிசில்பெறக்கருதிச்செல்லப்பட்டோரை அளித்திலராயினும் பரிசிலர்பழியார்; அதனால், நீ எனக்கு இன்னையாயினும், வெறேன், வாழ்வாயாக, ஓரி, ஆகாயத்தின்கண் மின்முதலியதொகுதியையுடையமழைபோல யாவர்க்கும் எப்பொருளையும் வரையாதுவழங்கும், வண்மையையுடையோய், நின்னை.— (எ - று.)

ஓரி, வள்ளியே! பரிசிலர் புன்னும்பொழுதும்பழித்தலல்லது உள்ளிச்சென்றோர்ப்பழியலர்; அதனால், யானும் நின்னைப்புலவேன்; வாழியரோனக்கூட்டுக.

மேற்கூறிய இரத்தல்முதல் நான்கிற்கும், ஈயென இரத்தலால் இழிபுபெற்றுக் கொள்ளேனென்னுமுயர்பு யான்பெற்றிலேனென்பதூஉம், அவ்வாறிரப்பவும் ஈயேனென்றாற்போலப், பரிசினீட்டித்தலால் உன்ன இழிபுபெற்றுக் கொள்ளேனைக்

சிறப்புமின்மை ... ழகெடவிலக்கியென்பதூஉம் பாடம்.



கொண்டப்பொருள் வேட்டுவ, பெட்பின்றீதல் யாம்வேண்டலம்; பரிசிலர்க்கு ... ம்பு களிறின்றிப்பெயரல; நீ சேறியல்யாக்கவெனக்கூட்டுக.

யான்களிறின்றிப்பெயராநின்றேனென்பதுகருத்தாகலின், சேறியாகவென்பது இகழ்ச்சிக்குறிப்பு. (உ0௫)

(உ0௬.) *வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்
தாம் முன்னியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
(௫) பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்றல் நெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொல்
அறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
க0 காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
மரங்கொ றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினு மத்திசைச் சோறே.

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சிபரிசினீட்டித்தானை ஔவையார் பாடியது.

(இ - ள்.) வாயில்காப்போய், வாயில்காப்போய், வண்மையுடையோரது செவியிடத்தே விளங்கியசொற்களைவிதைத்துத் தாம்நினைத்தபரிசிலை விளைக்கும் வலியையுடைத்தாகிய நெஞ்சினையுடைய மேம்பாட்டிற்குவருந்தும் இப்பரிசிலான்வாழும் இல்வாழ்க்கையையுடைய பரிசிலர்க்கு அடையாத வாயில்காப்போய், விரைந்த குதிரையையுடைய தலைவனாகிய நெடுமானஞ்சிதான் தன்தரமறியான்கொல்லோ?

(உ௦எ.) எழுஇனி, நெஞ்சஞ், செல்கம் யாரோ
2 பருகு அன்ன வேட்கை யில்வழி
3 அருகிற் கண்டு மறியார் போல
4 அகனக வாரா முகனழி பரிசில்
௫ தாளி லாளர் வேளா ரல்லர் ;
6 வருகென வேண்டும் வரிசை யோர்க்கே ;
7 பெரிதே யுலகம் பேணுநர் பலரே ;
8 மீளி முன்பி னாளி போல
9 உள்ள முள்ளவிந் தடங்கா வெள்ளென
க௦ நோவா தோன்வயிற் றிரங்கி
11 வாயா வன்கனிக் குலமரு வோரே.

திணையும் துறையும் அவை.

வெளிமான் துஞ்சியபின், அவன் தம்பி, இளவெளிமானைப் பரிசில்கேட்டுவென அவன் சிறிதுகொடுப்பக், கொள்ளாது பெருஞ்சித்திரனார் பாடியது.

(இ - ள்.) எழுந்திருப்பாயாக, இனி, எம்முடைய நெஞ்சமே, யாம்போவேமாக; யார்தாம், கண்ணாற்பருகுவதுபோலும், விருப்பமில்லாதவிடத்துத், தம்மருகே கண்டுவைத்தும், கண்டறியாதார்போல, உள்ளமகிழ்வாராத, தம்முகமழிந்தாற்பட்ட பரிசிலைப் பிறிதோரிடத்துச்செல்லமுயலும் முயற்சியில்லாதோர் விரும்பாரல்லர்; இவ்வணம்வருவீராக்வென்று, எதிர்கோடல்வேண்டும் தாமுடையோர்க்குப் பெரிது, உலகம்; விரும்புவோரும் பலர்; (ஆதலால்) மறம்பொருந்திய வலியையுடைய யாளியையொப்ப, உள்ளம், மேற்கோளின்றித் தணியாது, கண்டோர்யாவர்க்குந்தெரிய தம்மைக்கண்டிரங்காதவனிடத்தேநின்றிரங்கி உள்ளுறக்கனியாத வலியபழத்தின்பொருட்டுச், சுழல்வோர். (எ - று.)

வன்கனியென்றது, நெஞ்சுநெகிழ்ந்துகொடாதபரிசிலை; உலமரலும் - அலமரல்போல்வதோருரிச்சொல்.

ட. வாயாவன்கனிக்கு உலம்வருவோர்யாரோ? நெஞ்சமே, உள்ளம் உள்ளவிந்தடங்காது யாளிபோல் இனி எழுவெனக்கூட்டி, வினைமுடிவுசெய்க.

விசையோர்க்கு யானிபோல உள்ளம் உள்ளவித்தடங்காதென முற்றாக்கி உரைப்பாருமுனர். (உ0எ)

---

(உ0அ.) குன்றும் மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
(ரு) யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த விப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்

க0) நுவல்வுறு சிறுமையள் பலபுலந் துறையும்
11 இடுக்கண் மனையோள் தீரிய இந்நிலை
12 விடுத்தேன் வாழியர் குருசி லுதுக்காண்
13 அவல நெஞ்சமொடு செல்வல் நிற்கறுத்தோர்
14 அருங்கடி முனையரண் போலப்
கரு) பெருங்கையற்றவென் புலம்புமுந் துறுத்தே.

திணையும் துறையும் அவை.
சேரமான்குடக்கோச்சேரலிரும்பொறை பரிசில்நீட்டித்தானைப் பெருங்குன்றூர் கிழார் பாடியது.

(இ - ள்.) உயிர்ப்பன்மையைக் காக்கும் நினது உயர்ச்சியைப் பாராது, காதல் கண்மாறிய அறமில்லாத பார்வையுடனே கூடி, நின்போல்வார் யாவரும் இதற்கொத்த அறிவையுடையராய் அருள்மாறுவாராயின் எம்போல்வார் இவ்வுலகத்துப் பிறவாதொழியக்கடவர்; குற்றந்தீர்ந்த கற்பினையுடையளாய் எம்மைவிரும்பிய காதலி இறந்துபடாது உயிர்வாழ்வுடையளாகக்கூடின், எம்மிடத்து நினைவிருத்தல் அரிது; அதனால், அறனில்லாதகூற்றம் திறப்பாடின்றி உயிர்கொளத்துணிய இறந்துபட்டான்கொல்லோ? என்னுயிர் கெடுவதாகவென்று சொல்லுதலுற்றோளையுடையாளாய்ப் பலபட வெறுத்துறையும் மனைவியது துன்பந்தீர்க்கவேண்டி இப்பொழுதே விடைகொண்டேன்; வாழ்வாயாக; இறைவ! இதனைப்பாராய்; இன்னாமையையுடைய நெஞ்சத்துடனே போவேன், நின்னை வெகுண்டோரது அணுகுதற்கரிய காவலையுடைய முனையிடத்து அரணைப்போலப் பெரிய செயலற்ற எனது வறுமையை முன்போகவிட்டு.—(எ - று.)

குரிசிலே, நும்மனோரும் இனையராயின் எம்மனோர் இவட்பிறவார்; என்காதலி உயிர் சிறிதுடையளாயின் நினையாதிருத்தலரிது; அதனால், அம்மனையோள் இடுக்கண் தீர்க்கவேண்டி இப்பொழுதே விடுத்தேன்; நிற்கறுத்தோர் முனையரண் போலக் கையற்ற என்புலம்பு முந்துறுத்துச் செல்வேன், வாழியரெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

'உதுக்காண்' என்றது, அச்செல்வை. என்வறுமை என்னை விட்டு நீங்கப்போதலையொழியப் புலம்பை முந்துறுத்துக்கொண்டு போகாநின்றேனென இரங்கிக் கூறியவதனால், 'வாழியர்குரிசில்' என்பது, இகழ்ச்சிக்குறிப்பாயிற்று. உயிர்வெங் காதலியென்று பாடமோதுவாரும் உளர். (உக0)

(உகக.) அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலே
XI. 2 றணங்குடை யரவி னருந்தலை துமிய!

கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
௧0) உள்ளியது முடித்தோய் மன்ற முன்னாட்
கையுள் ளதுபோற் காட்டி வழிநாட்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்
நாணாய் ஆயினும் நாணக் கூறியென்
நுணங்கு செந்நா அணங்க வேத்திப்
௧௫) பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
ஆடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வ லத்தை யானே வைகலும்
வல்சி யின்மையின் வயின்வயின் மாறி
இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்
௨0) பாஅ லின்மையிற் பல்பாடு சுவைத்து
முலைக்கோண் மறந்த புதல்வனொடு
மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.— அஞ்சத்தக்க முறைமையையுடைய வெய்ய சினத்தையுடைய மழையின்கணுள்ள இடியேறு அச்சமுடைய பாம்பினது அணுகுதற்கரிய தலைதுணிய விலவகலத்தை நின்றுபார்ப்பதுபோன்ற நீண்டமலைபிறழச் சிறுமலைகளும் வெறியும் ஒலிபோல வீரமாக விளங்கொலிக்கும் படையுடனே மேற்சென்று நேர்தார்பட எதிர்நின்றுகொல்லும் புகழமைந்த தலைவ, நீ வள்ளியையாதலான் எமக்குத் தாழ்ந்த பரிசில் நல்குவனென்று நின்னை நினைத்துவந்த உயர்ந்தநிலைமையையுடைய பரிசிலேனாகிய யான் நினக்கு எம்மை எதிரேற்றுக்கொள்ளாமாந்தரது கொடுமையைச்சொல்லவும், நின்னுடையநினைவே செய்தாய், நிச்சயமாக; முன்னைநாட் பரிசில்கையிலேயுள்ளதுபோலக்காட்டிப் பிற்றைநாட் பொய்யைப்பெற்றுநின்ற நினதுபுறநிலைமைக்கு யான்வருந்தியவருத்தத்திற்கு நீதான்நாணாயாயினும் நீநாணச் சொல்லி எனது நுண்ணிய ஆராய்ச்சியையுடைய செவ்வியநா வருந்தப்புகழ்ந்து நாடோறும் பாடப்பாடப் பின்னரும் பாடவேண்டும்புகழைப்பெற்றுக்கொண்ட நினது வெற்றிபொருந்திய அகன்றமார்பை வணங்கிவாழ்த்திப்போவேன், யான்; நாடோறும் உணவில்லாமையான் இடந்தோறுமிடந்தோறும் மாறிமாறி அகழ்தலால் இல்லெலிமடிந்த பழையசுவராகிய எல்லையையுடைய பாலில்லாமையாற்

வணங்குவ னிவனென' என்று பாடமாயின், வன்மையையுடையனாதலால் இவன் எமக்குத்தாழ்ந்து பரிசிலளிப்பனெனக்கருதியெனக. 'வள்ளியையாகலின், வணங்குவனிவனெனக் கொள்ளாமாந்தர் கொடுமைகூற' என்றதற்கு வள்ளியையாதலின் இவனைவணங்குவேனெனவிதினைந்தவனைக் அதுபொறாது, நின்பாற்பரிசில்பெருத மாந்தர் ......... தூவவெறியுமென்பது, தூவெறியுமென வகரங்கெட்டு முடிதல் புறனடையாற்கொள்க; தூவவெறியுமென்பதூஉம் பாடம்; விகாரமெனினுமமையும். 'புறநிலை' என்பதற்குப் புறங்கடைநின்றநிலையென்றுமாம். 'இல்லெலிமடிந்ததொல்சுவர்' என்பதற்கு இல்லெலிதான் தொழில்மடிந்த தொல்சுவரென்றுரைப்பினுமமையும். நின்னைக்கொடுமைகூறவென்றுரைப்பினுமமையும். (உகக)

(உகஉ.) நுங்கோ யாரென வினவி னெங்கோக்
களமர்க் கரித்த விளையல் வெங்கள்
யாமைப் புழுக்கிற் காமம் வீட வாரா
வாரற் கொழுஞ்சூ டங்கவு ளடாஅ
(ரு) வைகுதொழின் மடியு மடியா விழவின்
யாணர் நன்னாட் டுள்ளும் பாணர்
பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்
கோழி யோனே கோப்பெருஞ் சோழன்
பொத்தி னண்பிற் பொத்தியொடு கெழீஇ
க0 வாயார் பெருநகை வைகலு நக்கே.

திணை - அது; துறை - இயன்மொழி.
கோப்பெருஞ்சோழனைப் பிசிராந்தையார் பாடியது.

(இ - ள்.) உம்முடைய இறைவன் யாரென்று கேட்பீராயின், எம்முடைய இறைவன் களமர்க்கு அரிக்கப்பட்ட முதிர்ந்த விரும்பத்தக்க கள்ளினை ஆமையின் பிறைச்சியுடனே வேட்கைதீர அக்களமர் உண்டு ஆரல்மீனாகிய கொழுவிய சூட்டை அழுகிய கதுப்பகத்தே அடக்கி மதுவுண்ட மயக்கத்தால், வைகுந்தொழிலொழியும் நீங்காத விழவினையுடைய புதுவருவாயுளதாகிய நல்லசோழநாட்டுள்ளும் பாணருடைய வருத்தமுற்றசுற்றத்தினது பசிக்குப்பகையாய் உறையூரென்னும் படைவீட்டிடத்திருந்தான், கோப்பெருஞ்சோழன்; புணரில்லாத நட்பினையுடைய பொத்தி

பரந்தவிடத்தையுடைய [illegible]த்தின்கண் நின்னிடத்துப் போர்செய்யவந்த இரு
வரையுங்கருதிற் பழையதாய்த் தங்கப்பட்ட வலியையுடைய நின்பகைவேந்தராகிய
சேரபாண்டியருமல்லர்; போரின்கண் விரும்பியகாட்சியுடனே நின்னோடு பகையாய்
வேறுபட்டெழுந்த அவ்விருவர்களும்; நினையுங்காலத்து நீயும் அவர்க்கு அத்தன்மை
யையாகிய பகைவனல்லை; பகைவரைக்கொல்லும்* யானையினையுடையதலைவ! நீ பர
ந்துபட்ட நல்லபுகழை இவ்வுலகத்துப்பொருந்தித் தேவருலகத்தின்கட்போய
பின்பு நீ ஒழித்த அரசாட்சியுரிமை அவர்க்குரித்து; ஆதலால், அப்பெற்றித்தாதலு

* எயிற்றியானென்றும் பிரதிபேதமுண்டு.

யறிவோய், பெரிதும் இன்னமும் கேட்பாயாக; புகழைவிரும்புவோய், நிலைபெற்ற வலியோய், நின்னைக்கருதிப் போர்செய்தற்கு எழுந்திருந்த சூழ்ச்சியில்லாத அறிவை யுடையநின்புதல்வர்தோற்பின் நின்னுடைய பெரியசெல்வத்தை அவர்க்கொழியயாவர்க் குக் கொடுப்பை; போரைவிரும்பியசெல்வ, நீ அவர்க்குத்தோற்பின் நின்னையிகழும் பகைவருவப்பப் பழியை உலகத்தேநிறுத்துவை; ஆதலான், ஒழிவதாக, நின்னு டைய மறன்; கடிதின்விரைந்தெழுந்திருப்பாயாக; நின்னுடைய உள்ளம் வாழ்வ தாக; அஞ்சினோர்க்கு அரணாகும் நினதடிநிழல் மயங்காமற் செய்தல்வேண்டும், நல் வினையை; விண்ணோரது பெறுதற்கரிய உலகத்தின்கண் அமைந்தவர் விரைந்த விருப்பத்தோடு விருந்தாக ஏற்றுக்கொள்ள.—(எ - று.)

மற்று - அசை. இல் - விழைவின்கண்வந்தது. வானோருலகென்றது, ஒட் டன்றி ஒருபெயராய்நின்றது.

வேந்தே, நின்மறனொழிக; அமர்ந்தவர் விருந்தெதிர்கொளற்கு நன்றுசெய்தல் வேண்டும்; ஆதலால், அதற்கு விரைந்தெழுவாயாக; நின்னுள்ளம் வாழ்வதாக வெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

செல்வமும்பழியும்நின்னவிருப்பாற்பட்டனநல்வினைகொண்டன. அஞ்சுதல் - இவற்குப்பின்னும்நிற்றல். தாணிழல்மயங்காதென்பதற்கு நினக்கு ஒருநீக்கும் வாராமலென்றதாகக்கொள்க. இனி, 'அதனா லன்ன தாதலு மறிவோய்' என்ற தற்கு உயர்ந்தோருலகமெய்துவதற்குக்காரணத்தால் அத்தாயும் அவர்க்கு அப்படியே யுரித்து; அன்னதாதல் நீயறிவையெனமுற்றாக்கவும், அஞ்சினோர்க்கு ஏமமாகுநின் றாணிழலெனமுற்றாக்கி மயங்காது தெளிந்துநின்று நன்றுசெய்தல்வேண்டுமெனவு முரைப்பாருமுளர். 'புரவெங்கோட்டியொடு புறநெறிநிறுத்தவர்' என்று பாட மோதுவாருமுளர். (உகஙா)

(உகச.) செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே
ஐயம் மறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே!—
யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே; (ரு)
அதனால், உயர்ந்த வேட்கை யுயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்;
தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்,
மாறிப் பிறப்பி னின்மையுங் கூடும்; (௧௦)
மாறிப் பிறவா ராயினு மிமயக்

யானைவேட்டைக்குப்போவோன் யானையையும் எளிதாகப்பெறுவன்; குறும்பூழ் வேட்டைக்குப்போவோன் அதுபெறாது வறியகையினனாயும் வருவன்; அதனால், உயர்ந்தவிருப்பத்தையுடைய உயர்ந்தோர்க்குத் தாஞ்செய்யப்பட்ட நல்வினைக்கூற்றின்கண், அதனை அனுபவித்தலுண்டாமாயின், அவர்க்கு இருவினையுஞ் செய்யப்படாத உம்பருலகத்தின்கண் இன்பமனுபவித்தலுங் *கூடும்; அவ்வுலகத்தின்கண் நுகர்ச்சியில்லையாயின், மாறிப்பிறத்தலிலேகூடும் பிறப்பின்கண் இன்மையெய்தவுங்கூடும்; மாறிப்பிறவாரென்று சொல்லுவாருளராயின், இமயமலையின்சிகரம் ஓங்கினாற்போன்ற தமதுபுகழை நிலைபெறுத்தி வசையில்லாத உடம்பொடுகூடிநின்றிறத்தல் மிகத் தலையாயது; அதனால், எவ்வாற்றானும் நல்வினைசெய்தல் அழகிது.—(எ - று.)

உயர்ந்திசினோர்க்கென்றும் காண்பதன்றியும் உயர்ந்திசினோர்செய்வினை மருங்கிலெய்தலுண்டெனின், இவர்க்கு நுகர்ச்சியுங்கூடுமென்றுரைப்பினுமமையும். 'காட்சியொடுநீங்காநெஞ்சத்து' என்பதூஉம் பாடம். 'பிறவாராயினும்' என்னும் உம்மை - அசைநிலை; உம்மையின்றியோதுவாருமுளர். (உகச)

(உகரு.) கவைக்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்
தாதெரு மறுகிற் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ
ஆய்மக ளட்ட வம்புளி மிதவை
அவரை கொய்யுந ரார மாந்துந்
தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்
பிசிரோ னென்ப வென்னுயி ரோம்புநனே!
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே!

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.
கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் வாரா ரென்ற சான்றோர்க்கு அவர் வருவா ரென்று சொல்லியது.

(இ - ள்.) கவர்த்தகதிரையுடைய வரகினது குத்துதலுற்ற வடிக்கப்பட்ட சோற்றையும் தாதாக உதிர்ந்த எருவையுடைய மன்றத்தின்கண் போதொடு தழைத்த வேளையினது வெள்ளிய பூவை வெள்ளியதயிரின்கட் பெய்து இடைமகள் அடப்பட்ட அழகிய புளிங்கூழையும், அவரைகொய்வார் நிறைய உண்ணும் தெற்கின்கட் பொதியின்மலையையுடைய பாண்டியனது நல்லநாட்டினுள்ளும் சேய்த்தாகிய பிசிரென்னுமூரிடத்தானென்று சொல்லுவர் என்னுயிரைப் பாதுகாப்பானை;

வழுவின்று பழகிய கிழமைய ராயினு
மரிதே தோன்ற லதற்பட வொழுகலென்
றையங் கொள்ளன்மி னாரறி வாளிர்
இகழ்வி லன்னினி யன்யாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே
தன்பெயர் கிளக்குங் காலை யென்பெயர்
பேதைச் சோழ னென்னுஞ் சிறந்த
கய) காதற் கிழமையு முடைய னதன்றலை
இன்னதோர் காலை நில்லலன்
இன்னே வருகுவ னொழிக்கவற் கிடமே.

திணையும் துறையும் அவை.

அவன் வடக்கிருந்தான் பிசிராந்தையார்க்கு இடனொழிக்கவென்றது.

(இ - ள்.) நின்னை அவன் கேட்டிருக்குமளவல்லது, சிறிதுபொழுதுங் காண்டல்கூடாது; பல்லியாண்டுசெல்லத் தவறின்றாக மருவிப்போந்த உரிமையையுடையோராயினும் 'அரிதே தலைவா, அவ்வழுவாதகூற்றிலேபட வொழுகுதல்' என்றுகருதி ஐயப்படாதொழிமின், நிறைந்த அறிவினையுடையீர்; அவன் என்னை என்றும் இகழ்ச்சியிலனாய் இனியகுணத்தினையுடையன்; பிணித்தநட்பினையுடையன்; புகழழியவரூஉம் பொய்ம்மையைவிரும்பான்; அவன் தனது பெயரைப் பிறர்க்குச்சொல்லும்பொழுது என்னுடையபெயர் பேதைமையையுடைய சோழனென்று எனதுபெயரைத் தனக்குப்பெயராகச்சொல்லும் மிக்க அன்புபட்ட உரிமையையுமுடையன்; அதற்குமேலே இப்படி யான்துயருறுங்காலத்து ஆண்டுநில்லான், இப்பொழுதே வருவன்; அவனுக்கு இடமொழிக்க.—(எ - று.)

'அதற்பட' என்பதற்கு, அவ்விறந்தபாட்டிலேபடவென்றும், 'இகழ்விலன்' என்பதற்கு இகழப்படுவன குணமிலனென்றுமுரைப்பினுமமையும். 'பேதைச் சோழ'னென்றது, தான்றன்னை இழித்துக்கூறியது. (உகசு)

(உகஎ.) நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே
யெனைப்பெருஞ் சிறப்பினோ டீங்கிது துணிதல்
அதனினு மருட்கை யுடைத்தே பிறனாட்டு

4 தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி
ரு இசைமரபு ஆக நட்புக் கந்தாக
6 இனையதோர் காலை யீங்கு வருதல்
7 வருவ னென்ற கோனது பெருமையு
8 மதுபழு தின்றி வந்தவ னறிவும்
9 வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே
க0 அதனால் தன்கோ லியங்காத் தேயத் துறையுஞ்
11 சான்றோ னெஞ்சுறப் பெற்ற தொன்றிசை

217-218

— 12 யுண்ஞேனே பிழந்தவிவ் வுலகம்
— 13 மென்னு வதுகொ லளியது தானே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.
அவன் வடக்கிருந்தானுழைச்சென்ற பிசிராந்தையாரைக்கண்டு பொத்தியார் பாடியது.

(இ - ள்.) கருதுங்காலத்து வியக்குந்தன்மையையுடைத்து, எத்திணையும் பெரியதிலைமையுடனேகூடியும் இவ்விடத்தே இவன்சிறப்புக்களைக்கைவிட்டுவரத் துணிதல்; இவன் இவ்வாறு துணிந்த அதனினும்வியக்குந்தன்மையையுடைத்து, வேற்றுவேந்தனது நாட்டின்கண் விளக்கமமைந்த சான்றோன் பாதுகாத்துப் புகழ் மேம்பாடாக நட்பே பற்றுக்கோடாக இத்தன்மைத்தாகிய ஓர் இன்னாக்காலத்து இவ்விடத்துவருதல். இவ்வாறுவருவனென்று துணிந்துசொல்லிய வேந்தனது பிகுதியும் அவன் சொல்லியசொற் பழுதின்றாகவந்தவனது அறிவும் வியக்குந் தோறும்வியக்குந்தோறும் வியப்புக் கைமிக்கது; ஆதலால், தன்செங்கோல்செல்லாததேயத்துறையும் அமைந்தோனது நெஞ்சைத் தன்னிடத்தேயுரித்தாகப்பெற்ற பழைய புகழையுடைய அப்பெற்றிப்பட்ட பெரியோனையிழந்த இத்தேயம் என்ன இடும்பையுறுங்கொல்லோ! *இதுதான் இரங்கத்தக்கது.—(எ - று.)

இதுவென்பது, அரசனைக்கைவிட்டு இறந்துபடத்துணிதலென்றுமாம். (உ௧௭)

(உ௧௮.) பொன்னுந் துகிரு முத்து மன்னிய
— 2 மாமலை பயந்த காமரு மணியு
— 3 மிடைபடச் சேய வாயினுந் தொடை புணர்ந்
— 4 தருவிலை நன்கல மமைக்குங் காலை
— ரு ஒருவழித் தோன்றி யாங்கென் றுஞ் சான்றோர்
— 6 சான்றோர் பால ராப
— 7 சாலார் சாலார் பாலரா குபவே.

திணையும் துறையும் அவை.
† பிசிராந்தையார் வடக்கிருந்தாரைக் கண்டகண்ணகனார் பாடியது.

(இ - ள்.) பொன்னும் பவளமும் முத்தும் நிலைபெற்ற பெரியமலைதரப்பட்ட விரும்பத்தக்கமணியும், ஒன்றற்கொன்று இடைநிலம்படச் சேய்நிலத்தினவாயினும் கோவைபொருந்தி அரியவிலையினையுடைய நல்ல அணிகலங்களைச்செய்யுங்கால்

(உககூ.) உள்ளாற்றுக் கவலைப் புள்ளி நீழன்
முழூஉ வள்ளூர முணக்கு மள்ள!
புலவுதி மாதோ நீயே
பலரா லத்தைநின் குறியிருந் தோரே.

திணையும் துறையும் அவை.
அவன் வடக்கிருந்தானைக் கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் பாடியது.

(இ - ள்.)—யாற்றிடைக்குறையுட் புள்ளிப்பட்ட மரநிழற்கணிருந்து, உடம்பாகிய முழுத்தசையைவாட்டும்வீர, நின்கருத்திற்கேற்ப நின்னோடு வடக்கிருந்தார் பலராதலான், யானிதற்கு உதவாது பிற்படவந்ததற்கு என்னை அவரோடு சொல்லி வெறுத்தி நீ.—(எ - று.)

யான் பிற்படவந்ததற்கு என்னைப்புலந்து என்னோடு சொல்லாடாதிருந்தாய் நீயென்றும், இவனுடனே வடக்கிருந்தோர்களும் எதிரேற்றுக்கொள்ளாமைநோக்கி நின்குறிப்பிற்கேற்பப் புலந்தார்பலரென்றுமுரைப்பினுமமையும். 'உள்ளாற்றுக் கவலை' என்பதற்கு வழிக்குள்ளாகிய நாற்றிசையுங்கூடிய இடமென்றுமாம்; கவலைத் வழிக்குள்ளென்றுரைப்பாருமுளர். அரசுதுறந்து வடக்கிருந்த உயிர்நீத்த உன்னை மிகுதியான் மள்ளவென்றார். (உககூ)

(உ௨0.) பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த
பெருங்களி றிழந்த பைதற் பாகன்
அதுசேர்ந் தல்கிய அழுங்க லாலை
வெளில்பா ழாகக் கண்டுகலுழ்ந் தாங்குக்
கலங்கினெ னல்லனோ யானே பொலந்தார்த்
தேர்வண் கிள்ளி போகிய
பேரிசை மூதூர் மன்றங் கண்டே?

திணையும் துறையும் அவை.
அவன் வடக்கிருந்தானுழைச்சென்று மீண்டுவந்து உறையூர்கண்டபொத்தியார் அழுது பாடியது.

(இ - ள்.)—பெரியசோற்றையுண்டாக்கிப் பலயாண்டுபாதுகாத்த பெரியகளிற்றையிழந்த வருத்தத்தினையுடையபாகன் அவ்வியானைசேர்ந்துதங்கிய இரக்கத்தையுடையகூடத்தின்கட் கம்பம்வறிதேநிற்கப், பார்த்துக் கலங்கினதன்மைபோல யான் இறந்துபடுதலின்றிக் கலங்கினேனல்லனோ, பொன்னாலியன்றமாலையையுடைய தேர்வண்மையைச்செய்யும் கிள்ளிபோகப்பட்ட பெரியபுகழினையுடைய பழைய உறையூரின்மன்றத்தைப்பார்த்து.—(எ - று.)

மூதூர்மன்றங்கண்டு கலங்கினேனல்லனோவெனக் கூட்டுக.

3 யறவோர் புகழ்ந்த வாய்கோ லன்னே,
4 திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே,
(ரு) மகளிர் சாயன் மைந்தர்க்கு மைந்து,
6 துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கில்,
7 அனைய னென்னா தத்தக் கோனை,
8 நினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று
9 பைத லொக்கற் றழீஇ யதனை
(௧0) வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்!
11 நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
12 கெடுவி னல்லிசை சூடி
13 நடுக லாயினன் புரவல னெனவே.

திணையும் துறையும் அவை.
அவன் நடுகற்கண்டு அவர் பாடியது.

(இ - ள்.) பாடுநர்க்குக்கொடுத்த பலபுகழினையுமுடையன்; கூத்தர்க்குக்கொடுக்கப்பட்ட மிக்க அன்பினையுமுடையன்; அறத்திறமுடையோர்புகழப்பட்ட நீதிநூற்குத்தக ஆராய்ந்தசெங்கோலையுடையன்; சான்றோர்புகழப்பட்ட திண்ணியநட்பினையுடையன்; மகளிர்மாட்டு மென்மையையுடையன்; வலியோரிடத்து மிக்கவலியுடையன்; குற்றமற்றகேள்வியையுடைய அந்தணர்க்குப் புகலிடம்; அத்தன்மையையுடையோனென்றுகருதாது, அத்தகுதியையுடையோனை அவ்வாறுகருதாத கூற்றம் அவனது இனிய உயிர் கொண்டுபோயிற்று. அதனால், பையுற்றசுற்றமுடையசுற்றத்தை அணைத்துக்கொண்டு அக்கூற்றத்தை வைவேமாக வாரீர், மெய்யுரையையுடையபுலவீர்; அகன்ற இடத்தினையுடையவுலகம் துன்பமிகக் கேடில்லாத நல்லபுகழ்ச்சிமாலையைச்சூடி, நடப்பட்டகல்லாயினன் எம்முடைய புரவலனெனச்சொல்லி.—(எ - று.)

ஈத்தபுகழ் - ஈதலானுண்டாகியபுகழெனவும், ஈத்தவன்பு - ஈத்தற்கு ஏதுவாகிய அன்பெனவுங்கொள்க.

வாய்மொழிப்புலவீர், அத்தக்கோனைக் கூற்றம் இன்னுயிருய்த்தது; அதனால், புரவலன் கல்லாயினனென ஒக்கல்தழீஇ அதனைவைகம் வம்மோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

சாயல் மைந்து புக்கிலென்பன - [illegible]

திணையும் துறையும் அவை.
அவனைத் தன்மகன்பிறந்தபின் பெயர்ந்துச்சென்று பொத்தியார் எனக்கு இடந்தாவென்றுசொற்றது.

(இ - ள்.)—நீயால்விளங்கிய ஒளிவ்பயுடைய ஆபரணந்தாற்சிறந்த வடிவினையுடையளாய் நின்நிழலினும் ஒருபொழுதுநீங்காத நீவிரும்புத்தக்கமனைவிபெறப்பட்ட புகழமைந்தபிள்ளையானவன் பிறந்தபின் வாவெனச்சொல்லி என்னை இவ்விடத்துநின்றும்போக்கிய என்னோடு உறவில்லாதவனே! நின்னோடு என்னிடை நட்பைக் கருதாதிருப்பையல்லை; புகழைவிரும்புவோய்! நீ எனக்குக்குறித்தவிடம் யாது? சொல்லுவாயாக.—(எ - று.)

மற்று - அசை. அழல்போலப் பாடஞ்செய்யுமேனியெனினுமமையும். (0)

XXIII. (உ௨௩.) பலர்க்குநிழ லாகி யுலகமீக் கூறித்
2 தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி
3 நிலைபெறு நடுகல் லாகியக் கண்ணு மி
4 டங்கொடுத் தளிப்ப மன்ற வுடம்போ
(5) டின்னுயிர் விரும்புங் கிழமைத்
6 தொன்னட் புடையோர் தம்முழைச் செலினே.

திணையும் துறையும் அவை.
கல்லாகியும் இடங்கொடுத்தகோப்பெருஞ்சோழனை வடக்கிருந்தபொத்தியார் பாடியது.

(இ - ள்)—பலர்க்கும் அருளுடைமையான் நிழலையொத்து உலகத்தார் மிகுத்துச்சொல்ல உலகத்தையாளுந்தன்மை முடியச்செலுத்துதற்கு மறுமையையெண்ணித்தலால் முடிவுபோகாமையின் வடக்கிருத்தற்குவேண்டிய சிறிய இடத்தின்கணிருந்து உயிர்நீத்தவின்நிலைபெறநாட்டப்பட்ட கல்லானவிடத்தும் இடங்கொடுத்தளிப்பர், நிச்சயமாக; உடம்போடு இனியவுயிர்விரும்புமாறுபோல விரும்புமுரிமையையுடைய பழையதாகிய நட்பையுடையோர் தம்மிடத்தேசெல்லின்.—(எ - று.)

மீக்கூறியென்பது, மீக்கூறவெனத்திரிக்கப்பட்டது; ஆணைகூறியென்றுமாம்.

தொன்னட்புடையோர்தம்முழைச்செலின், இடங்கொடுத்தளிப்பவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

அவன் நட்பினை வியந்துகூறியது. (உ௨௩)

XXIV. (உ௨௪.) அருப்பம் பேணாக் காமர் கடந் துறந்
[illegible]

கo) புரிந்தோன் மன்ற வறிவுடை யாளன்
11 இறந்தோன் றானே யளித்திவ் வுலகம்!
12 அருவி மாறி யஞ்சுவரக் கருகிப்
13 பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்
14 பசித்த வாயத்துப் பயனிரை தருமார்
கரு) பூவாட் கோவலர் பூவுட னுதிரக்
16 கொய்துகட் டழித்த வேங்கையின்
17 மெல்லியன் மகளிரு மிழையணைந் தனரே.

திணையும் துறையும் அவை.
சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

(இ - ள்.) அரிய அரண்களைப் பாதுகாவாது போரைச்செய்தழித்ததுவும் இளையாய்க்கூடிய இனத்துடனேயுங்கூட மதுக்குடங்களைச் சோறாகக்கொடுத்த பெரிய பாண்சுற்றமாகிய சுற்றத்தைப் பாதுகாத்ததுவும், அறத்தைத்தெளிவுணர்ந்த ஒழுக்கம் மாட்சிமைப்பட்ட அந்தணரது அவைக்களத்தின்கண் வேள்விக்குரிய முறைமையை நன்றாகவறியுஞ்சடங்குகள் அம்முறைமையை முன்னின்றுகாட்டப் பல்லாரும்புகழப்பட்ட நல்ல இயல்பையுடைத்தாகிய கற்பொழுக்கமாகிய கொள்கையையுடைய குற்றந்தீர்ந்த குலமகளிரோடு வட்டமாகியவடிவினையுடைத்தாகிய பலபடையாகச்செய்யப்பட்ட மதிலாற்சூழப்பட்ட வேள்விச்சாலையுட் பருந்துவிழுங்குவதாகச்செய்யப்பட்டவிடத்து, நாட்டிய யூபமாகிய நெடிய கம்பத்து வேதத்தாற்சொல்லப்பட்ட வேள்வியினைச்செய்துமுடித்ததுவுமாகிய இவற்றனையபயனை யறிந்தநிச்சயமாக அறிவினையுடையோன்; அவன்றான் துஞ்சினன்; ஆதலான் இனி இவ்வுலகம் இரங்கத்தக்கது; அருவிநீர்மறுத்து உலகத்தாரஞ்சும்படி வெம்மையுற்றுப் பெரிய வற்கடமிக்கவேனிற்காலத்துப் பசித்த ஆயமாகியபயன்படும் ஆனிரையை இரக்ஷித்தல்செய்வாராகக் கூர்மைபொருந்திய கொடுவாளாற் கோவலரானவர்கள், பூக்களுடனேயுதிரக் கொம்புகளைக்கழித்து அதன்றழைச்செறிவை யழித்த வேங்கையினையொப்ப மெல்லிய இயல்பினையுடைய உரிமைமகளிரும் அருங்கலவணிமுதலவாகிய அணிகலனையொழித்தார். (எ - று.)

முறைநற்கறியுநர் முன்னுற வேள்வித்தொழின்முடித்ததூஉமெனவினையும்.

மையாததுபோன்றுளியன் போரணிகலத்தையுடைய வளையென்றுசொல்லப்படும்
வண்டுகள்மொய்க்கப்படுங்கண்ணியையுடைய இத்தன்மையினையுடையோனை நீ
கொண்டாயாயின் இனி நின்பசியைக்கெடுப்போர் யார் சொல்லுவாயாக. (எ-று)

கூற்றமே, இத்தன்மையோனைக் கொண்டாயாயின், நின் பசியைத்தீர்ப்போர்
இனி யார்? வீரமின்மையின் வித்தட்டுண்டனை; நன்வாயாகுதல் இன்னுங்காண்
குழையெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

வையம் - நியாயமுமாம்.

(உஉஎ)

*கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை இன்னநாளிற்றுஞ்சுமென அஞ்சி, அவன்றுஞ்சியவிடத்துக் கூடலூர்கிழார் பாடியது.

(இ - ள்.)—மேடவிராசிபொருந்திய கார்த்திகைநாளின்முதற்காலின்கண் நிலைபெற்ற இருளையுடைய பாதியிரவின்கண் முடப்பனைபோலும்வடிவையுடைய அனுடநாளின் அடியின் வெள்ளிமுதலாகக் கயமாகிய குளவடிவுபோலும்வடிவையுடைய புனர்பூசத்திற்கடையின்வெள்ளி எல்லையாகவிளங்கப் பங்குனிமாதத்தின்முதற் பதினைந்தின்கண் உச்சமாகிய உத்தரம் அவ்வுச்சியினின்றும்சாய அதற்கு எட்டாமீனாகியமூலம் அதற்கெதிரே எழாநிற்க அந்த உத்தரத்திற்கு முன்செல்லப்பட்ட எட்டாமீனாகிய மிருகசீரிடமாகியநக்கத்திரம் துறையிடத்தேதாழக் கீழ்த்திசையிற் போகாது வடதிசையிற்போகாது கடலாற்சூழப்பட்டபூமிக்கு விளக்காக முழங்காநின்ற தீப்பரக்கக் காற்றாற்பிதிர்ந்துமலர்ந்து ஒருமீன்வீழ்ந்தது, வானத்தினின்றும்; அதனைப்பார்த்து, யாமும்பிறருமாகிய பல்வேறுவகைப்பட்ட இரவலர் எம்முடைய பறையொலிபோலும், ஒலியையுடைய அருவியையுடைய, நல்லமலைநாட்டுக்குவேந்தனாகியவன் நோயையுடையனல்லனாகப்பெறின், அழகிதென இரங்கி. நெஞ்சத்துடனே மடிந்தவுள்ளம் பரப்ப யாம் அஞ்சினேம்; அஞ்சினபடியே எழாநாள் வந்ததாகலின், இன்று, வலியையுடையயானை, கையை, நிலத்தேயிட்டுவைத்துத் துஞ்சவும் திண்ணிய வாராற்பிணிக்கப்பட்டமுரசம் கண்கிழிந்துருளவும் உலகிற்குக் காவலாகிய வெண்கொற்றக்குடை கால்துணிந்து உலறவும் காற்றுப்போலும்இயல்பையுடைய மனஞ்செருக்கிய குதிரைகள் கதியின்றிக்கிடக்கவும் இப்படிக்கிடக்கத் தேவருலகத்தையடைந்தான்; ஆகையாலே, ஒள்ளியவளையையுடைய மகளிர்க்கு மேவப்பட்டதுணையாகித் தனக்குத்துணையாகிய மகளிரையும் மறந்தான்கொல்லோ; பகைவரைப்பிணித்துக்கொள்ளும் வலியையும் நச்சியோர்க்கு அளந்துகொடுத்தலறியாத வண்மையையுமுடைய நீலமலைபோலும்மாயோன்.—(எ - று.)

மன்னும், தில்லும் - அசை. கயத்துக்குளக்கடையென்க. நற்றிசையாகிய கிழக்கும்வடக்குஞ்செல்லாது தீத்திசையாகியதெற்கும் மேற்குமாகிய ஒருதிசைக்கண் வீழ்ந்ததென்று ஆம்; அன்றி வடக்குங்கிழக்குஞ்செல்லாதெனவே வடகிழக்கேவீழ்ந்ததென்றுமாம். பட்டவென்றல் இன்றமையிற் கைவைத்துறங்கவும் கண்கிழிந்துருளவும் கால்பரிந்துலறவும் கதியின்றிவைகவுமெனத் தகுதிபற்றிகூறப் பட்டன.

மாயோன் மகளிர்க்குந்துணையாகித் தன்றுணைவியையும் மறந்தனனோ இல்லை

யோடியாம் மறவாவிலமையமாயினமெ௳ன இரங்கிக்கூறியவாறு.

"ஆஞ்சினமெமுனாள்வந்தன்றின்றேன" என்பதூஉம் பாடம். (உஉக)

(உ௩௦.) கன்றமர் ஆயங் கானத் தல்கவும்,
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவும்

* 'கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையென்ற வழி, அரசனென்பதோர்சாதியும், சேரமானென்பது ஒருகுடியும், வேழநோக்கினையுடையானென்பதோர்வடிவும், சேயென்பதோரியற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறையென்பதொருசிறப்புப்பெயரும்' என்பது, திநீக்கிநூள், ௬ - ம் அதி

களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்
(௫) வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட்
பொய்யா வெழினி பொருதுகளஞ் சேர
வீன்றோ ணீத்த குழவி போலத்
தன்னமர் சுற்றந் தலைத்தலை யினையக்
கடும்பசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு
(௧௦) நோயுழந்து வைகிய வுலகிலு மிகநனி
நீயிழந் தனையே யறனில் கூற்றம்
வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான்
வீழ்குடி யுழவன் வித்துண் டாஅங்
கொருவ னாருயி ருண்ணா யாயின்
(௧௫) நேரார் பல்லுயிர் பருகி
யார்குவை மன்னோவவ னமரடு களத்தே.

திணை - அது; துறை - கையறுநிலை.
அதியமான்றகடூர்பொருதுவீழ்ந்த எழினியை அரிசில்கிழார் பாடியது.

(இ - ள்.) கன்றைமேவிய ஆனிரை மேய்ந்தகாட்டிடத்தே, பிறிதொன்றால் ஏதமின்றிக்கிடப்பவும் சுரத்தின் கடத்தலால் வெம்மையுற்றகாவிலையுடையவழி போவார் தாம்வேண்டியவிடத்தே தங்கவும் களத்தின்கணிறைந்த நெற்பொலி காவலின்றியேகிடப்பவும் எதிரில்நின்றுதடுக்கும்பகையைத்துரந்த, நிலங்கலங்காத செவ்விய, ஆட்சியினையும் உலகத்தார்புகழ்ந்த, விளங்கியபோரைச்செய்யும் ஒள்ளிய வாளினையும் தப்பாதமொழியினையுமுடைய, எழினி பொருது போர்க்களத்தின் கண்ணேவீழப் பெற்றதாயாற்கைவிடப்பட்ட உண்ணுதகுழவியையொப்பத் தன்னைமேவியகிளை, இடந்தோறுமிடந்தோறும், வருந்த மிக்கபசிவருத்திய, கலக்கமுற்ற துன்பமிக்க நெஞ்சமொடு அவனையிழந்து வருத்தமுற்றுக்கிடந்த உலகத்து விதனத்தினும், மிகப்பெரிதாக நீயிழந்தாய், அறமில்லாதகூற்றமே, வாழ்தலேதுவாகவரும், வயலிடத்துவிளையும் வருவாயையறியானாய்த் தளர்ந்தகுடியையுடைய உழவன் விதையையுண்டாற்போல இந்த ஒருவனது பெறுதற்கரிய, உயிரையுண்டிலையாயிற் பகைவருடைய பலவுயிரையும், பருகிநிறைவை, அவன் போரிற் பகைவரைக்கொல்லும் களத்தின்கண்.—(வி - று.)

மன் அறிவின்கண் வந்தது. உயிர் உண்ணவும் பருகவும் படுவதன்றாயினும் இவ்வாறு கூறுதல், "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப், பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி" என்றாற்போல, ஓரணிகுறித்து நின்றது.

எழினி களஞ்சேர் ஒருவனுருயிருண்ணுமாயின், அவன் அமர்க்களத்துப் பல வுயிரும் பருகியார்குவை; அதுகழிக்கதே யெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

கடும்பசிகலங்கியவென்றும் பாடம். (உ௩0)

(உ௩௧.) எறிபுனக் குறவன் குறையலன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்



குறுகினுங் குறுகுக குறுகா து சென்று
விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்
(௫) திங்க ளன்ன வெண்குடை
ஒண்ஞா யிறன்னோன் புகழ்மா யலவே.

திணையும் துறையும் அவை.
*அதியமானெடுமானஞ்சியை ஒளவையார் பாடியது.

(இ-ள்.) வெட்டிச்சுட்ட கொல்லைநிலத்துக் குறவனால் தறிக்கப்பட்ட துண்டம்போன்ற கரிந்தபுறத்தையுடைய விறகால் அடுக்கப்பட்ட ஈமத்தின்கண் எரிகின்ற ஒள்ளிய அழலின்கண் உடல் சுடச் சென்று குறுகினும் குறுகுக, அவ்வாறன்றிக் குறுகாதுபோய் விசும்பாகிய ஆகாயத்தின் உயர ஓங்கினுமோங்குக, குளிர்ந்தகதிரையுடைய மதிபோலும் வெண்கொற்றக்குடையையுடைய ஒள்ளிய ஞாயிற்றையொப்போனது புகழ் மாயா.—(எ-று.)

ஈமமென்பது, பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு. இனி, ஈமவொள்ளழல் இவனுடல்சிதையாமற் சிறுகினுஞ்சிறுகுக; அன்றிச் சிதையும்படி சென்று நீளினும் நீளுக; இவன்புகழ் மாயாவெனினுமமையும். எறிபுனக்குறவனென்ற பாடமோது

(உகூஉ.) இல்லா கியரோ காலை மாலை!
அல்லா கியர்யான் வாழு நாளே!
நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ?
(ரு) கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே?

† திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.) அவனையின்றிக் கழிகின்ற காலையும் மாலையும் இனி இல்லையாகுக; யான் உயிர்வாழுநாளும் எனக்கு ஓர்பயன்படாமையின் அவையல்லவாக; நடப்பட்டகல்லின்கட், பீலியைச்சூட்டி, நாரால் அரிக்கப்பட்ட தேறலைச், சிறியகலத்தான் உகுப்பவும், அதனைக்கொள்வனோ, கொள்ளானோ; சிகரமோங்கிய, உயர்ந்தமலைபொருந்திய, நாடுமுழுவதுங்கொடுப்பவும், கொள்ளாதவன். (எ - று.)

நாடுடன்கொடுப்பவும், கொள்ளாதோன், நாரரி சிறுகலத்துகுப்பவும், கொள்வன் கொல்லோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

(உகூங.) பொய்யா கியரோ! பொய்யா கியரோ!
பாவடி யானைப் பரிசிலர்க் கருகாச்
சீர்கெழு நோன்றா ளகுதைகட் டோன்றிய

* அவனை அவர்பாடியதென்றும் பாடபேதமுண்டு.

பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ
ரு இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பூண்
போரடு தானை யெவ்வி மார்பின்
னெஃகுறு விழுப்புண் பலவென
வைகுறு விடியல் இயம்பிய குரலே.

திணையும் துறையும் அவை.
வேள் எவ்வியை வெள்ளெருக்கிலையார் பாடியது.

(இ - ள்.) பொய்யாகுக; பொய்யாகுக; பரந்த அடியினையுடைய யானையைப் பரிசிலர்க்குக் குறைவறக்கொடுக்கும் சீர்மைபொருந்திய வலியமுயற்சியையுடைய அகுதையிடத்து உளதாகிய பொன்னாற்செய்யப்பட்ட ஆழிபோலப் பொய்யாகுக; பெரியபாண்சுற்றத்திற்குந்தலைவன், பேரணிகலத்தினையுடைய போரின்கட்கொல்லும் படையினையுடைய எவ்வியது மார்பின்கண் வேல்தைத்த சிறந்தபுண் பலவென வைகுதலுற்ற விடியற்காலத்துச்சொல்லிய வார்த்தை. (எ - று.)

திகிரியென்றது, திகிரிதைத்ததென்று பிறந்த வார்த்தையை. பொன் - ஈண்டு இரும்பு. அகுதை - விரைவின்கண்வந்தது. பெரும்பூண்மார்பென இயையும்.
— இயம்பியகுரல் பொய்யாகியரோவெனக்கூட்டுக. (உ௩௩)

நோகோ யானே தேய்கமா காலை
பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
வின்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொல்
ரு உலகுபுகத் திறந்த வாயிற்
பலரோ டுண்டன் மரீஇ யோனே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.) நோவக்கடவனோ யான்; கெடுவதாகக்கடவ மிக்ககாலம் மாய்வதாக; பிடியினது அடிபோன்ற சிறிய இடத்தினைமெழுகித் தன்னைமேவப்பட்ட காதலி புன்மேல்வைக்கப்பட்ட இனியசிறியபிண்டத்தை எவ்வாறுண்டான்கொல்லோ? உலகத்தார்யாவரும் புகும்பரிசு திறந்தவாயிலையுடைய பலரோடுங்கூடி உண்டலைமருவியோன். (எ - று.)

இன்சிறுபிண்டமென்றது, இகழ்ச்சிக்குறிப்பு.

6 யென்பொடு தடிபடு வழியெல்லாம்
7 மெமக்கீயு மன்னே ;
8 யம்பொடு வேனுழை வழியெல்லாந்
9 தானிற்கு மன்னே ;
க0) நரந்த நாறுந் தன்கையாற்
11 புலவுநாறு மென்றலை தைவரு மன்னே ;
12 யருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
13 யிரப்போர் கையுளும் போகிப்
14 புரப்போர் புன்கண் பாவை சோர
கரு) வஞ்சொ னுண்டேர்ச்சிப் புலவர் நாவிற்
16 சென்றுவீழ்ந் தன்றவ னருநிறத் தியங்கிய வேலே :
17 யாசா கெந்தை யாண்டுளன் கொல்லோ ?
18 இனிப்பா டுநரு மில்லைப் பாடுநர்க்
19 கொன்றீ குநரு மில்லைப் ;
உ0) பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
21 சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
22 றீயாது வீயு முயிர்தவப் பலவே.

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

(இ - ள்.) சிறிய அளவினையுடைய மதுவைப்பெறின் எங்களுக்குத்தருவன்; அதுகழிந்தது! பெரிய அளவினையுடையமதுவைப்பெற்றானாயின் அதனை யா முண்டுபாட எஞ்சியமதுவைத் தான்விரும்பிநுகர்வான்; அதுகழிந்தது! சோறு எல்லார்க்கும்பொதுவாதலாற் சிற்றளவினையுடைய சோற்றின்கண்ணும் மிகப்பல கலத்தோடேகூட உண்பன்; அதுகழிந்தது! மிக்க அளவினையுடைய சோற்றின் கண்ணும் மிகுபலகலத்தோடேகூட உண்பன்; அதுகழிந்தது! என்பொடுகூடிய வூன்றடியுளதாகிய இடமுழுதும் எங்களுக்கு அளிப்பன்; அதுகழிந்தது! அம் போடுவேல்தைத்து உருவுமிடமாகிய போர்க்களமுழுதும் தான்சென்றுநிற்பன்; அதுகழிந்ததே! தான்காதலிப்பார்க்கு மாலைசூட்டுதலான் நரந்தப்பூநாறும் தன்னு [illegible] புலால்நாறும் எம்முடையதலையைத்தடவு

டையகையால் ...

வன் ; அதுகழிந்ததே! அரியதலைமையையுடைய, பெரியபாணரது, அகலியமண்
டையின்கண் துளையையுருவி இரப்பவர்கையுளும் போய்த்துருவித் தன்னாற்புரக்கப்
படும் சுற்றத்தாரது புல்லியகண்ணிற் பாவை ஒளிமழுங்க அழகியசொல்லை ஆரா
யும் நுண்ணிய ஆராய்ச்சியையுடைய அறிவினையுடையோர்நாவின்கண்ணே போய்
வீழ்ந்தது, அவனது அரியமார்பத்தின்கண் தைத்தவேல். எமக்குப் பற்றாகிய எம்
மிறைவன் எவ்விடத்துள்ளான்கொல்லோ? இனிப் பாடுவாருமில்லை; பாடுவார்க்கு
ஒன்றீவாருமில்லை; குளிர்ச்சியையுடைய நீரையுடையதுறையின்கட் பகன்றையி
னது தேனைப்பொருந்திய பெரியமலர் பிறராற்சூடப்படாது கழிந்தாற்போலப்
பிறர்க்கு ஒருபொருளைக்கொடுக்காது மாய்ந்துபோமுயிர் மிகப்பல.—(எ - று.)

236. 237.

அவன்சிறந்த உருவியவேல், அவனுக்கு இறந்துபாட்டைச்செய்தலோடே யானைமுதலாயினார்க்கும் இறந்துபாட்டினைச்செய்தலான் ஒருகாலத்தே யாவரிடத்தும் உறைத்ததென்றுரைக்கக்கொள்க. மன் - கழிவின்கண் வந்தது. (உ௩௫)

(உ௩௬) கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழஞ்
சிலைகெழு குறவர்க் கல்குமிசை யாகும்
மலைகெழு நாட மாவண் பாரி
கலந்த கேண்மைக் கொவ்வாய் நீயெற்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே ௫
பெருந்தகு சிறப்பி னட்பிற் கொல்லா
தொருங்கு வரல்விடாஅ தொழிகெனக் கூறி
இனையை யாதலி னினக்கு மற்றியான்
மேயினே னன்மை யானே யாயினும்
இம்மை போலக் காட்டி யும்மை ௧0
இடையில் காட்சி நின்னோ
டுடனுறை வாக்குக வுயர்ந்த பாலே.

திணை - அது; துறை - கையறுநிலை.

வேள்பாரிதுஞ்சியவழி மகளிரைப் பார்ப்பார்ப்படுத்து வடக்கிருந்தகபிலர் பாடியது.

(இ - ள்.) முசுக்கலைகிழித்துண்டலாற் பீறிய முழவுபோலும் பெரியபலாப்பழம் வில்லையுடையகுறவர்க்கு அதன்பெருமையாற் சிலகாலைக்கு இட்டுவைத்துண்ணு முணவாம் மலையையுடையநாட்டையுடையோய், பெரியவண்மையையுடையபாரி, நீயும்யானுங்கலந்தநட்பிற்குப் பொருந்த ஒழுகாயாய் நீ என்னை வெறுத்தாயாகக் கடவை, நீ எனக்கு உதவிசெய்த யாண்டெல்லாம்; பெருமைதக்க தலைமையினை யுடைய நட்பிற்குப்பொருந்தாமல், யானும் நின்னோடு கூடப்போதுதற்கு இசையாது நீ ஈண்டுத்தவிர்கவெனச்சொல்லி இப்படி வேறுபட்டதன்மையையுடையை யாதலின், நினக்கு யான் பொருந்தினேனல்லாமையான், இவ்வாறு பொருந்திற்றிலேனாயினும் இப்பிறப்பின்கண் நீயும்யானுங்கூடி இன்புற்றிருந்தவாறுபோலக் காட்டி மறுபிறப்பினும் இடைவிடாத காட்சியினையுடையநின்னோடு கூடிவாழ்தலை உயர்ந்தவிதி கூட்டுவதாக.—(எ - று.)

உலந்தயாண்டென்றுபாடமாயின், கழிந்தயாண்டென்க. மற்று - அசைநிலை.

(உ௩அ.) கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடிப்
பேஎ யாயமொடு பெட்டாங்கு வழங்குங்
காடுமுன் னினனே கட்கா முறுநன் ௫
றொடிகழி மகளிரிற் றொல்கவின் வாடிப்
பாடுநர் கடும்பும் பையென் றனவே
தோடுகொண் முரசங் கிழிந்தன கண்ணே
ஆளில் வரைபோல் யானையு மருப்பிழந் தனவே
வெந்திறற் கூற்றம் பெரும்பே துறுப்ப ௧0
எந்தை யாகுத லதற்பட லறியேனே
அந்தோ வளியேன் வந்தனென் மன்ற
என்னா குவர்கொலென் றுன்னி யோரே
மாரி யிரவின் மரங்கவிழ் பொழுதின்
ஆரஞ ருற்ற நெஞ்சமொ டோராங்குக் ௧௫
கண்ணி லூமன் கடற்பட் டாங்கு
வரையளந் தறியாத் திரையரு நீத்தத்
தவலம் மறுசுழி மறுகலின்
தவலே நன்றுமன் றகுதியு மதுவே.

திணையும் துறையும் அவை.
வெளிமான் துஞ்சியபின் அவர் பாடியது.

(இ - ள்.) பிணமிட்டுப் புதைக்கப்பட்ட கவிக்கப்பட்ட செய்யதாழியினது குவிந்தபுறத்தேயிருந்த செவிசிவந்த கழுகின்சேவலும், பொகுவலென்னும்புள்ளும், அஞ்சாவாய் வாய்வலிய காக்கையும் கோட்டானும் கூடிப் பேயின்திரளுடனே தாம் விரும்பியவழியேயியங்கும் சுடுகாட்டைத் தலைப்பட்டான், வீரபானத்தைக்காமுறுவான்; அவனுடைய வளைகழிக்கப்பட்ட கைம்மைமகளிரைப்போலப் பழைய அழகு தொலைந்து பாடுவாரதுசுற்றமும் ஒளிமழுங்கின; தொகுதிகொண்ட முரசங்களும் கண்கிழிந்தன; பாகர்முதலாயின ஆளில்லாத மலைபோன்ற யானைகளும் மருப்பிழந்துவிட்டன; இவ்வாறு வெவ்வியதிறலையுடைய கூற்றம் பெரிய இறந்துபாட்டை எய்துவிப்ப என்னிறைவன் ......... அவ்விறந்துபாட்டிலேபடுதலை அறியேனாய் ஐயோ! அளித்தலையுடையேன், வந்தேன்; நிச்சயமாக என்னவாமுறுவர்கொல்!

ரும்பிழந்தன' என்றகருத்து: அவற்றால்தொழில்கொள்வாரின்மையின், "அலை யணிழந்தனவென்பதாம்."

(உ௩௯)

(உ௩௯.) தொடியுடைய தோண்மணந்தனன்;
கடிகாவிற் பூச்சூடினன்;
தண்கமழுஞ் சாந்துநீவினன்;
செற்றோரை வழிதபுத்தனன்;
(௫) நட்டோரை யுயர்புகூறினன்;
வலியரென வழிமொழியலன்;
மெலியரென மீக்கூறலன்;
பிறரைத்தா னிரப்பறியலன்;
இரந்தோர்க்கு மறுப்பறியலன்;
௧0) வேந்துடை யவையத் தோங்குபுகழ் தோற்றினன்;
வருபடை யெதிர்தாங்கினன்;
பெயர்படை புறங்கண்டனன்;
கடும்பரிய மாக்கடவினன்;
நெடுந்தெருவிற் றேர்வழங்கினன்;
௧௫) ஓங்கியல களிறூர்ந்தனன்;
தீஞ்செறி தசும்புதொலைச்சினன்;
பாணுவப்பப் பசிதீர்த்தனன்;
மயக்குடைய மொழிவிடுத்தனன்;
ஆங்குச் செய்ப வெல்லாஞ் செய்தன னாகலின்
௨0) இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் றலையே.

திணையும் துறையும் அவை.

நம்பிநெடுஞ்செழியனைப் பேரெயின்முறுவலார் பாடியது.

(இ - ள்.) — இளையமகளிரது வளையணிந்ததோள்முயங்கினன்; காவலையுடைய இளமரக்காக்களிற் பூவைச்சூடினன்; குளிர்ந்த மணநாறும் சாந்தைப்பூசினன்; பகைத்தோரைக் கிளையொடுங்கெடுத்தான்; நட்டோரை மிகுத்துக்கூறினன்; இவர் நம்மில்வலியவரென்றுகருதி அவர்க்கு வழிபட்டுகூறியறியான்; இவர் நம்மில் எளிய

(உசாங)
இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் *தூங்குவழித் தூங்கி
(5) மறையென லறியா மாயமி லாயமொ
டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
(க0) குளித்துமணற் கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே.

திணையும் துறையும் அவை.
அவனைத் தொடித்தலைவிழுத்தண்டினார் பாடியது.

(இ - ள்.) இப்பொழுது நினைந்து இரக்கமாகின்றது; செறிந்த மணலிடத்துச் செய்யப்பட்ட வண்டற்பாவைக்குப் பறிக்கப்பட்ட பூவைப் பறித்துச் சூடிக் குளிர்ந்த பொய்கையின்கண் விளையாடும் மகளிரொடு கைகோத்து அவர் தழுவினவிடத்துத் தழுவி ... ... ... யசைந்து ஒளித்துச்செய்யும் அஃது அறியாத வஞ்சனையில்லாத இளமைத்திரளுடனே கூடி உயர்ந்த கோடுகளையுடைய மருதின் துறையிலே வந்து உறத் தாழ்ந்து நீர்க்கு அண்ணிதாகப் படிந்த கொம்பிலே ஏறி, அழகுமிகக் கரையிடத்தோர் வியப்பத் திரையிடத்துத் திவலையெழ ஆழ்ந்த நெடிய நீரையுடைய மடுவின்கண் துடுமென்றொலிப்பக் குதித்து மூழ்கி மணலைமுகந்து காட்டிய கல்வியில்லாத இளமை இரக்கத்தக்கது; அவ்விளமை எவ்விடத்துண்டுகொல்லோ; பூண் செறித்த தலையையுடைய பரியதண்டுக்கோலையூன்றித் தளர்ந்து இருமல் இடையே நெருங்கின சிலவார்த்தையையுடைய பெரிய முதுமையையுடையேமாகிய எங்களுக்கு.—(எ - று)

எமக்கு இளமை யாண்டுண்டுகொல்லோ? அதுதான் இரங்கத்தக்கதென்க.

9. பரற்பெய் பள்ளிப் பாயின் றுவதியும்
௧0 உயவற் பெண்டிரே மல்லே மாதோ
11 பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
12 நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
13 பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
14 வள்ளித ழவிழ்ந்த தாமரை
௧௫ நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே.

திணை - அது; துறை - ஆனந்தப்பையுள்.
பூதபாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது.

ஆனந்தப்பையுளாவது —
"விழுமங் கூர வேய்த்தோ ளரிவை
கொழுநன் வியக் குழைந்தயங் கின்று."

(இ - ள்.) பலசான்றவிரே பலசான்றவிரே, நின் தலைவனோடிறப்ப நீபோ வென்றுகூறாது அதனைத் தவிர்கவென்றுசொல்லிவிலக்கும் பொல்லாதவிசாரத்தையுடைய பலசான்றவிரே, அணில்வரிபோலும்வரியையுடைய விளைந்த வெள்ளரிக்காயின், அரிவாளால் அரிந்திடப்பட்ட விதைபோன்ற நல்ல வெள்ளிய நறிய நெய்தீண்டாமல், இலை இடையேபயின்ற, கையாற்பிழிந்துகொள்ளப்பட்ட நீர்ச்சோற்றுத்திரளுடனே, வெள்ளிய எள்ளைத்துவையலுடனே, புளிகூட்டி அடப்பட்ட வேளையிலைவெந்த வேவையுமாகிய, இவை உணவாகக்கொண்டு பருக்கைகளாற்படுக்கப்பட்ட படுக்கையின்கண் பாயின்றிக்கிடக்கும் கைம்மைநோன்பால் வருந்தும் பெண்டிருள்ளேமல்லேம், யாம்; புறங்காட்டின்கண் உண்டாக்கப்பட்ட கரிய முருட்டால், அடுக்கப்பட்டபிணப்படுக்கை உங்களுக்கு அரிதாவதாகுக; எமக்கு எம்முடையபெரியதோளையுடையனாகிய கொழுநன் இறந்துபட்டானாக, முகையில்லையாகவளவிய இதழ்மலர்ந்த தாமரையையுடைய நீர்செறிந்த பெரியபொய்கையும் தீயும் ஒருதன்மைத்து. (எ - று.)

தில், - விழைவின்கண்வந்தது.

எமக்குப் பொய்கையும் தீயும் ஒருதன்மைத்து; நுமக்கு அரிதாகுகவெனக் கூட்டுக.

(உரை)

இளமைபுறங்கொடுத்துப் பெருங்காடுநோக்கித் தான் தெருமருமெனக்கூட்டுக.

(உசஅ.) அளிய தாமே சிறுவெள் ளாம்பல்;
VIII. 2 இளைய மாகத் தழையா யினவே;
3 இனியே பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்
4 தின்னா வைக லுண்ணும்
(5) அல்லிப் படூஉம் புல்லா யினவே.

திணை - அது; துறை - தாபதநிலை.

........† ஒக்கூர்மாசாத்தனார் பாடியது.

தாபதநிலையாவது,—

‡ "குருந்தலர் கண்ணிக் கொழுநன் மாய்ந்தெனக்
கருங்கடற் கண்ணி கைம்மை கூறின்று."

(இ - ள்.) இரங்கத்தக்கன, சிறிய வெளிய ஆம்பல்; அவைதாம், யாம் இளையேமாயிருக்க முற்காலத்துத் தழையாயுதவின; இக்காலத்துப் பெரியசெல்வத்தையுடையதலைவன் இறந்தானாக உண்ணுங்காலமாறி இன்னாத வைகும்பொழுதின் கண் உண்ணும் தம் அல்லியிடத்துண்டாம் புல்லரிசியாயுதவின.—(எ - று.)

தாயின் புறங்காலத்தும் தன்புறங்காலத்தும் துணையாயுதவினவாதலான், அளியவாயினவென ஆம்பலைநோக்கிக்கூறியவாறாயிற்று.

* செல்லுலாவுண் வெல்லாம் புல்லென்றல் மரபு. (உசஅ)

(உசகூ.) கதிர்மூக் காரல் கீழ்ச்சேறு தொடுப்பக்
IX. 2 கணைக்கோட்டு வாளை மீநீர்ப் பிறழ

* நீங்குமென்றும் பிரதிபேதமுண்டு. † ஒக்கூரென்றும் பிரதிபேதமுண்டு.
‡ புறப்பொருள்வெண்பாமாலை, சிறப்பிற்பொதுவியற்படலம், ௨.

249.250.

2 இரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்
3 கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்க்
4 கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
௫ அல்லி யுணவின் மனைவியோ டினியே
6 புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்
7 வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்



8 முனித்தலைப் புதல்வர் தந்தை
9 தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே.

திணையும் துறையும் அவை.

.......... தாயங்கண்ணியார் பாடியது.

(இ - ள்.) தாளிப்போசைமிக்க கொழுவியதுவையோடுகூடிய அடிசில் இரவலரைத் தன்கண்ணே தகைத்தவாயிலினையும் தன்னாற்புரக்கப்படுவோர்கண்ணீரை மாற்றிய குளிர்ந்த நறிய பந்தரினையுமுடையமனையிடத்து மயிரைக்குறைத்துக் குறியவளையைக்களைந்து அல்லியரிசியாகிய உணவையுடையமனையாளுடனே இப்பொழுது பொலிவழிந்தாய், செல்வம்பொருந்திய அழகாகியநகரே! வான்சோற்றைக்கொண்டு இனியபாலைவேண்டும் வெறுப்பைத் தம்பிடத்தேயுடைய புதல்வர் தந்தை தனியிடத்தையுடைய புறங்காட்டை அடைந்தபின். (எ - று.)

கொய்து நீக்கியென்னும்வினையெச்சங்களை உணவினையுடையவென்னுங்குறி

(உருஉ.) கறங்குவெள் ளருவி யேற்றலி னிறம்பெயர்ந்து
2 தில்லை யன்ன புல்லென் சடையோ
3 டள்ளிலைத் தாளி கொய்யு மோனே
4 யில்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
(ரு) சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே.—

திணையுந் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

(இ - ள்.)—ஒலிக்கும்வெள்ளிய அருவிநீரை ஏற்றலால் பழையநிறம் மாறித் தில்லைத்தளிர்போன்ற புற்கென்றசடையோடேகூடிநின்று செறிந்த இலையையுடைத் தாளியைப் பறிப்போன், மனையின்கணியங்கும் மடப்பத்தையுடையமயிலை அகப்படுத்திக்கொள்ளும் சொல்லாகிய வலையையுடைய வேட்டைக்காரனாயிற்றுமுன்பு.—(எ - று.)

— இதுவும் அவன்நிலைமையைக்கண்டு வியந்துகூறியது. (உருஉ)

(உருங.) என்றிறத் தவலங் கொள்ள லினியே
2 வல்லார் கண்ணி யிளையர் திளைப்ப
3 *நகா அலென வந்த மாறே யெழாநெற்
4 பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்
(ரு) வளையில் வறுங்கை யோச்சிக்
6 கிளையு ளோய்வலோ கூறுநின் னுரையே.

திணை - பொதுவியல்; துறை - முதுபாலை.
.........† குளம்பாதாயனார் பாடியது.

முதுபாலையாவது,—
‡ "காம்புயர் கடத்திடைக் கணவனை யிழந்த
பூங்கொடி யரிவை புலம்புரைத் தன்று."

(இ - ள்.)—நின்னைப்பிரிந்து ஆற்றேனாகின்றேன்; என்னுடைய திறத்து வருத்தங்கொள்ளாதொழிவாயாக, இப்பொழுது; சுற்றப்பட்ட கண்ணியையுடைய நின்னோடேகூடி, விளையாடப்போந்த இளையோர், விளையாடாநிற்ப, அவரோடு கூடுகின்றிலேனென்றுகருதவந்த நின் இறந்துபாட்டை, நெல் எழாத பசியமூங்கில் புட்டை யொழித்தாற்போன்ற வெளுத்திருந்த வளையில்லாதவறியகைகளைத், தலைமேலே யேற்றிக்கொண்டு, நின் சுற்றத்திடத்தேசெலுத்தச், செல்லுவேனோ இன்னும், இறந்துபடினல்லது. நின்வார்த்தையை எனக்குச்சொல்லுவீராக.—(எ - று.)

அவலமென்றது. பிரிந்தவழி ஆற்றேனென்னாமை [illegible]

(உருச.) இளையரு முதியருங் வேறுபுலம் படர
எடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல
இடைச்சுரத் திறுத்த மள்ள விளர்த்த
வளையில் வறுங்கை யோச்சிக் கிளையுள்
(ரு) இன்ன னாயின னிளையோ னென்று
நின்னுரை *செல்லு மாயின் மற்று
முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்
வளனுஞ் செம்மலு மெமக்கென நாளும்
(க0) ஆனது புகழு மன்னை
யாங்கா குவள்கொ லளிய டானே.

திணையும் துறையும் அவை.
......... கயமனர் பாடியது.

(இ - ள்) — இளையோரும் முதியோரும் வேற்றுநிலத்தே விலகிப்போக, யான் எடுப்பவும் நீ எழுந்திராயாய், நினது மார்பம் நிலத்தைப்பொருந்தச் சுரத்திடை மேம்படவீழ்ந்த இளையோய், வெளுத்தவளையில்லாத வறியகையைத் தலைமேலே வைத்துச், சுற்றத்தின்கண் இத்தன்மையனாயினன் இளையனென்று யான்சொல்ல நின் இறந்துபாடுகூடியவார்த்தைசெல்லுமாயின், ஊர்முன்னர்ப்பழுத்த கோளியாகிய ஆலமரத்தின்கட் புள்ளுக்கள்மிகும் புதுவருவாயையுடைய அத்தன்மைத்து, என்னுடையமகனது செல்வமும் தலைமையும் எமக்கென்று நாடோறும் அமையாது புகழும் நின்னுடையமாதா எவ்வாறுவாள்கொல்! அவள் இரங்கத்தக்கவள்தான். — (எ - று.)

வளனும்செம்மலும் புள்ளார்யாணர்த்தற்றென்றது, புள்ளெல்லாஞ்சென்றுணுக ஆலமரம் பயன்பட்டுநின்றாற்போல, இவனும் தன்சுற்றத்தாரும் பிறரும் நாட்டாரும் நுகரும்படி நின்றமைதோன்றிநின்றது. 'நின்னுரைசெல்லுமாயின் யாங்காகுவள்கொல்' என்றகருத்து: யான் இறந்தபட்டவாறுசொல்லினன்றி அவள் வருத்த முறுவள்; அது யான்மாட்டேனென்பதாம். முன்னூர் - முன்மொழிநிலையல். மற்று - அசைநிலை. (உரு௪)

(உருரு.) ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே
†அணைத்தனன் கொளினே யகன்மார் பெடுக்க வல்லே னென்!

புலம்புக் கன்னே புல்லணற் காளை
யொருமுறை யுண்ணா வளவைப் பெருநிரை
யூர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்குந்
தொடுதலோம்புமதி முதுகட் சாடி
௧0 யாத்தரக் கழுமிய துகளன்
காய்தலு முண்டக் கள்வெய் யோனே.

திணையும் துறையும் அவை.

......உலோச்சனார் பாடியது.

(இ - ள்.) முட்டாளையுடைய காஞ்சியினது முதிர்ந்தபழத்தையொப்ப முற்ற விளைந்த இனிய கந்தாரமென்னும்பெயரையுடைய மதுவையுடைய வேற்றுப்புலத்துத் தான்கொண்டுவந்தநிறத்தினநிரையைக் கள்விலைக்கு கோரகக்கொடுத்து உண்டு செல்வித்தசைவயத்தின்று செல்வி நிணமிக்க எச்சிலாகிய ஈரமுடையகையை வில்லினதுபுறத்தேதிமிர்ந்து வேற்றுநாட்டின்கட்புக்கானே, புல்லியதாடியையுடையகாளை; இவ்விருந்தமறவர் ஒருகாலுண்பதன்முன்னே பெரிய ஆனிரையை இவ்வூர்ப்புறமெல்லாம் நிறைப் கொடுதருகுவன்; யாவர்க்கும்வாராது அதற்பொருட்டுத் தொடுதலைப் பாதுகாத்துவைப்பாயாக, முதிர்ந்தமதுவையுடையசாடியை; ஆவைக்கொண்டுவரக் கலந்ததுளியையுடையனும் அம்மதுவை விரும்புவோன் விடாய்த்தலுமுண்டாம். — (ப. - ரை.)

தலைச்சென்றென்பது, தலைச்செலவினைத்திரிக்கப்பட்டது. இதற்குக் கள்விலையாட்டியிடத்தேசெல்லவென்றுமாம். நிங்கட்டாரமென்றோதிக் தன்னாகிய இனியபண்டமெனினுமமையும். காய்தலுமுண்டென்பதற்குக் கள்வெய்யோனாகலின், நின்னை வெகுளவுங்கூடுமென்பாருமுளர். இவன்நிரைகொள்ளச் செல்கின்

(உருக.) ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயரா
திலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்
செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ளம்
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே.

திணை - கரந்தை; துறை - செருமலைதல்; பிள்ளைப்பெயர்ச்சியுமாம்.

கோடைபாடியபெரும்பூதனார் பாடியது.

(செருமலைதலாவது,—
*"வெட்சியரைக் கண்ணுற்றவரை
யட்குவரத் தாக்கி யுளர்செருப் புரிந்தன்று.")

* புறப்பொருள்வெண்பாமாலை, கரந்தைப்படலம், ௪.

(இ - ள்.) தாம்கொள்ளப்பட்ட எற்றையுடைய பெரிய ஆனிரையைத் தம்முன்னே போக மீட்கவருவாரைக்குறித்து, அந்நிரையொடு தாம்போகாது தலைமுறையாக்முடிய பெரியகாட்டின்கண், அலைகாத்திருந்த வில்லியல்லுடைய மறவர்க்கு ஒழிந்திலை யைக்கருதாய்; போகாதொழி போகாதொழி, நினது மேற்கோள் சிறப்பதாக; தெய்வம் மெய்யின்கணேறிய புலிமுகவையொப்பத் தாவித்தன்னும் ஆனிரைமேல்; மருங்கிலேவிளங்காகின்ற, ஒள்ளிய வாளினையும். வீரக்கழலினையுமுடையோய்.—

(எ - று.)

புனைகழலோய், காணாய்; செல்லல், செல்லல்; நின்னுள்ளம், சிறப்பதாக, வென்க்கூட்டுக.

செல்லலென்றது, அவரைக்கண்டு பொருது கொன்றன்றிச் செல்லலென்பது.

(உருக)

26 மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
27 யிடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
28 படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே.

திணை - அது; துறை - கையறுநிலை; பாடாண்பாட்டுமாம்.
......... ......... ......... வடமோதங்கிழார் பாடியது.

(இ - ள்.) ஓசைமிகவேண்டுமென்று அறையினும் ஓசையை உள்வாங்கி வேறுபட்டு இரங்கற்பண்ணாகிய விளரியைச்சென்றுறுகின்ற இனிய நரப்புத்தொடையினது நீங்கைநினைந்து நடுங்குநெஞ்சத்தைத் தலைப்பட்டுப் புறப்பட்டவளவின் நிமித்தவழியாக ஒருமனைவி விரித்துவருகின்ற மயிரைப்பார்த்துக் களர்நிலத்துள்ள கள்ளிமரத்தின் நிழற்கணுண்டாகிய தெய்வத்தையேத்திப் பசிதங்கிய வயிற்றையுடையையாய் இரங்கிக் கையாற்றொழுது கவிகுரிசிலைக் காணமாட்டேன்கொல்லோவென்று எதிர்வருவாரைப்பார்த்துக் கேட்கின்றபாண, கேட்பாயாக, அவனது செல்வம்பட்டதில்லை; இனி நீ அவன் நமக்குவிட்ட விளைநிலங்களைக் கைப்பற்றி உண்பாயாயினும், அன்றி, அவனொடுகூடி இன்புற்றிருந்தவிடத்து அவனையின்றி உயிர்வாழ்தற்பொருட்டு இரக்கக்கடவோமென்றெழுந்திருந்து வருந்திக்கொள்வாயாயினும் இரண்டும் நினது கையகத்துள்ளன; மிக்க அணுமையையுடைய ஊர் முன்னாகச்செய்யப்பட்ட பூசலின்கட்டோன்றித் தன்னுடைய ஊரின்கண் மிக்க நிரையைக்கொண்ட மறத்தினையுடையவீரர் எய்யப்பட்ட அப்புவெள்ளத்தைத் தன் றுடியே புணையாகவென்று புலைக்கவர்க்கொன்று அவர்கொண்டநிரையை மீட்டு உலகம்தனிப்பச் சூழ்ந்துகொண்டு பாம்பின்றீண்டிய பல்லினின்றும் பிழைத்துப் போந்த திங்களைப்போல மறவருடையகையினின்றும் பிழைத்துப்போந்த கன்றையுடைய பலவாகிய ஆனிரையுட்டேவந்த, சொல்லையுடையனாய்த் தோலுரித்த பாம்புபோலத் தானொருவனுமேயாக அரிதாகச்செல்லப்படும் தேவருலகத்தின்கட்போயினன்; அவனதுடம்பு காட்டேட்டெற்றியாற்றினது அரியகல்லிடத்தது

